PONDS

பொன் நகைகள்
மின்னிட.... சந்தன
நறுமணம் கமழ்ந்திட....

இனிய உணர்வுகள் மனதில் மலர்ந்திடும் கணங்கள். உங்கள் மேனியில் பொன் நகைகள் மின்னிட, தூய சந்தனத்தின் நறுமணம் கமழ்ந்திட. இதுவரை அனுபவித்தறியா உணர்வுகளால் உள்ளம் பூரிக்கிறது: பெண்மை உங்களிடம் பூரண பொலிவு பெறுகிறது.

அரிய நறுமணம்.
மதிப்பில் பொன்னைப்
போல் உயர்ந்தது.

பாண்ட்ஸ்
சாண்டல்
டால்க்




HTA 7023




# காலினால் எழுதி தலையெழுத்தை மாற்றும் சிறுமி!

சுமார் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு —

தமது ஆறு வயது அன்பு மகள் சசிகலாவை அழைத்துக் கொண்டு, கன்னியாகுமரிக்கு அருகிலுள்ள கொட்டாரம் அரசு தொடக்கப் பள்ளிக்கு வருகிறார், ஞானமுத்து நாடார் என்பவர். தலைமையாசிரியரைச் சந்தித்துத் தமது மகள் சசிகலாவை ஒன்றாம் வகுப்பில் சேர்க்க விரும்புவதாகக் கூறுகிறார்.

தலைமையாசிரியர், சிறுமி சசிகலாவைப் பார்க்கிறார். ஆறு வயதிற்கான வளர்ச்சி அச்சிறுமியிடம் காணப்படவில்லை. இளம்பிள்ளை வாதத்தினால் இரண்டு கைகளும் சூம்பிப் போய்த் தளர்ந்து, தொங்கிக் கொண்டிருக்கின்றன.

தலைமையாசிரியர், அச்சிறுமியின் தந்தையைப் பார்த்து, ''நீங்கள் உங்கள் மகளை ஏதாவது உடல் ஊனமுற்றோர் பள்ளியில் சேர்ப்பதுதான் நல்லது!'' என்கிறார்.

ஏமாற்றத்தோடும், வேதனையோடும், மகளை அழைத்துக் கொண்டு வீடு திரும்புவதற்குத் தந்தை நினைத்த வேளையில் —

''ஸார்! நான் கால்களினால் எழுதிப் படித்துக் கொள்கிறேன் ஸார்...! எனக்கு இங்கே இடமில்லையென்று சொல்லாதீர்கள், ஸார்!'' என்று சசிகலா தலைமையாசிரியரிடம் கெஞ்சுகிறாள்.

இதைக் கேட்டு அவளுடைய தந்தை திகைத்து நிற்க, அப்பள்ளித் தலைமையாசிரியரோ ஆச்சரியத்துக்குள்ளாகிறார்.



உடல் ஊனமுற்ற சசிகலாவின் உள்ளத்து உறுதி அவரை மெய்சிலிர்க்க வைக்கிறது! அவளுடைய ஆர்வத்துக்கு அணை போட அவர் விரும்பாமல் அப்பள்ளியிலேயே அவளைச் சேர்த்துக் கொள்கிறார்.

ஞானமுத்து நாடாரின் மகள் சசிகலா பள்ளிக்கூடத்தில் சேர்ந்த கதை இதுதான்!

சிறுமி சசிகலா, தரையில் சிலேட்டை வைத்து, வலது கால் விரல்களுக்கிடையே பலப்பத்தை வைத்து... எழுத முயன்றாள்; முடியவில்லை! பலப்பம் உடைந்து போனதுதான் மிச்சம். எல்லோருடைய பார்வையும் அவள் பக்கம் திரும்பியது. காலினால் அவள் எழுத முயற்சி செய்வதை ஏதோ வேடிக்கை போலப் பார்த்தார்கள். அந்தப் பிஞ்சு நெஞ்சம் கலங்கியது.

சசிகலாவின் தாய், அவளைச் சமாதானப் படுத்தி, வீட்டிலேயே அவள் காலினால் எழுதுவதற்கு உற்சாகமூட்டினாள்; பயிற்சியளித்தாள். சிறுமி சசிகலாவும், மீண்டும் மீண்டும் முயற்சி செய்தாள்! ஒருவாறு 'அ' எழுதிவிட்டாள்! அவள் மனம் மகிழ்ச்சியடைந்தது! தொடர்ந்து காலினால் எழுதினாள். வெகுசீக்கிரமே நன்றாக எழுத அவளால் முடிந்தது! படிப் படியாக முன்னேறினாள். ஒவ்வொரு வகுப்பிலும் முதல் மாணவியாகத் திகழ்ந்தாள்!

கடந்த ஆண்டு மார்ச் மாதம் நடந்த எஸ். எஸ். எல். சி. பரீட்சையையும், காலினாலேயே எழுதி, 345 மதிப்பெண்கள் பெற்றிருக்கிறாள்!

பள்ளிக்கூடத்தில் நடைபெறும் கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டிகளிலும் பங்கு கொண்டு பல பரிசுகளைப் பெற்றிருக்கிறாள், சசிகலா.

தற்போது, கொட்டாரம் அரசு மேல்நிலைப் பள்ளியில் 'பிளஸ் ஒன்' படிக்கும் மாணவி சசிகலாவைச் சந்தித்தோம்.

''காலினால் எழுதுவதற்கு வகுப்பில் உனக்குத் தனியாக ஏதாவது வசதி செய்து தந்திருக்கிறார்களா?''

''ஆமாம்! வகுப்பறையில் எனக்கு என்று தனியாக ஒரு பெஞ்ச் செய்து கொடுத்திருக்கிறார்கள். அந்த பெஞ்சில் உட்கார்ந்து கொண்டு, அதற்கு எதிராகப் போடப் பட்டு உள்ள ஸ்டூலின் மீது நோட்டுப் புத்தகத்தை வைத்து, வலது கால் பெருவிரலுக்கிடையில் பேனாவைப் பிடித்து எழுதுவேன்!''

''கையினால் எழுதுவதைப் போன்று காலினால் விரைவாக எழுத முடியாதே...! அப்படியிருக்கும்போது, எஸ். எஸ். எல். சி., பரீட்சையில் எல்லாக் கேள்விகளுக்கும் விடையெழுத முடிந்ததா...?''

''முடியவில்லைதான்...! அவர்கள் கொடுத்த இரண்டரை மணி நேரத்திற்குள் என்னால், எல்லாக் கேள்விகளுக்கும் விடையளிக்க முடியவில்லை! அதனால் தான் வெறும் 345 மார்க்குகளைப் பெற்றேன். எனக்கு மட்டும் கூடுதலாக வெறும் அரை மணி நேரம் ஒதுக்கியிருந்தால்.... இன்னும் அதிக மதிப்பெண்களைப் பெற்றிருப்பேன்!'' என்று சொன்ன சசிகலாவின் வார்த்தைகளைக் கேட்டு நம் மனம் உருகியது. இதுபோன்ற ஊனமுற்ற மாணவர்களுக்குப் பரீட்சை எழுதும் போது அதிக நேரம் ஒதுக்க வேண்டும் என்ற அடிப்படை விஷயம் கூட நமது அரசுக்கும் அதன் ஓர் அங்கமான கல்வி இலாகாவுக்கும் புரியாமலிருக்கிறதே! இதை எண்ணி நாம் பொருமுகையில் சசிகலா, தனது மற்றொரு ஏக்கத்தையும் வெளியிட்டாள்:

''பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது நான் 'உடல் ஊனமுற்றோர்' அடிப்படையில் அரசு உதவித் தொகை கேட்டுப் பல முறை மனுக் கொடுத்திருக்கிறேன். ஆனால் எனக்கு இதுவரை எந்தவித உதவியும் கிடைக்கவில்லை! சமீபத்தில் குமரி மாவட்டத்துக்கு வந்த தமிழகச் சட்டமன்ற மனுக்கள் குழுத் தலைவர், வி. பி. பாலசுப்பிரமணியத்திடமும் மனு கொடுத்திருக்கிறேன். எனக்கு, அரசு உதவியோ, தனியார் உதவியோ கிடைத்தால்... நான் தொடர்ந்து படிப்பதற்கு உபயோகமாயிருக்கும்!''

பேட்டி: **குளச்சல் இப்ராஹிம்**

படங்கள்: **கேசவன் ஸ்டுடியோ**

**(சிறுமி சசிகலாவுக்கு அமரர் கல்கி நினைவு அறக்கட்டளை சார்பில் ரூ. 500/— உதவித் தொகை வழங்கப் படுகிறது. — ஆசிரியர்)**

# அரசியல் கட்சிகளின் ஆள் பிடிக்கும் வித்தை!

## கலைஞரின் 'கள'ப்பணி!

பொதுத்தேர்தல் கண்ணில் படுவதாலோ, என்னவோ, இப்போது அரசியல் கட்சிகள் மத்தியில் 'ஆள் பிடிக்கும்' வித்தை தந்திரமாக நடக்கிறது.

கலைஞரின் அணியிலிருந்த தி. க. வீரமணியையும், மு. லீக் அப்துல் ஸமதுவையும் ராமாபுரத்தார் வளைத்து விட்டார். (ஸமது விரும்பினால் அவருக்குச் சபாநாயகர் பதவி கூடத் தரப்படும் என்று கூறப்பட்டிருக்கிறதாம்!) போதும் போதாததற்கு மதுரை நெடுமாறனின் கட்சியையும் உடைத்து அதில் ஒரு முக்கியப் புள்ளியாக இருந்த கிள்ளிவளவனையும் அ. தி. மு. க. பக்கம் இழுத்துப் போட்டாயிற்று.

தற்சமயம், கலைஞர் பக்கத்தில் கம்யூனிஸ்டு கட்சிகள், ஜனதா இவைதான் இருக்கின்றன.

இந்தச் சரிவைச் சரிக்கட்ட ஒரு புது முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார் கலைஞர். முன்னர் எம். ஜி. ஆர். நம்பியிருந்த சினிமாக் கோட்டையைக் கைப்பற்றுவதில் கடுமையாகக் கவனம் செலுத்துகிறார் அவர். எம். ஜி. ஆரின் கலையுலக வாரிசான பாக்யராஜ் கூட, சின்னராசாவாகத் தாக்குப் பிடிக்க முடியாமல் போயிருக்க, கலைஞரின் சீடர்கள் நடிகர் சங்கத்தில் செல்வாக்கை அதிகரித்துக் கொண்டிருப்பதோடு, வேறு பல குறிப்பிடத்தக்க வெற்றிகளையும் வளைத்துக் கொண்டிருக்கிறார்கள். கலைஞர், படங்களுக்குக் கதை, வசனம் எழுதுவதோடு, டைரக்டும் செய்யப் போகிறாராம்.

அது மட்டுமல்ல; 'நான் ஒரு கட்சியையும் சேர்ந்தவன் அல்ல' என்று கூறிக் கொண்டிருக்கும் விஜய்காந்த் போன்ற 'மன்ற'ச் செல்வாக்குப் பெற்ற நடிகர்களையும் தம் பக்கம் சேர்க்க ஏற்பாடு செய்து கொண்டிருக்கிறாராம். (அப்பல்லோ ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெறும் விஜய்காந்த்தை கலைஞர் அன்போடு சந்தித்து ஆறுதல் கூறியதற்குக் காரணம் கட்சி அல்ல என்று நம்புவோமாக!)



• பச்சைத் தமிழர்!



• டைரக்டர்...?



• கட்சி சார்பில்லை!



• பெரியாரிடம் பக்தி

## பெரியார் பக்தியா?

அவ்வப்போது தன் பெரியார் பக்தியை நிலைநாட்டிக் கொள்வதில் உஷாரானது, எம். ஜி. ஆர். அரசு.

பெரியாரின் எழுத்துச் சீர்திருத்தத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்தார்கள்.

'இப்போது இன்னொரு காரியத்தைச் செய்திருக்கிறார்கள். காமராஜை, பெரியார் 'பச்சைத் தமிழர்' என்று வர்ணித்தார் அல்லவா?

அதை அப்படியே உணர்த்துவது போல் திருமலைப் பிள்ளை ரோட்டிலுள்ள காமராஜ் நினைவகத்தில் அமைந்திருக்கும் காமராஜ் சிலைக்குப் பச்சை வர்ணம் அடித்துத் தள்ளியிருக்கிறார்கள்!

என்னே, கண்கொள்ளாக் காட்சி!

— ஒட்டக்கூத்தன் ஜி

# சோதனைக் குழாயில் ஒரு சாதனை!

**டெஸ்ட் ட்யூப் குழந்தைகள் உலகின் பல முன்னேறிய நாடுகளில் சகஜமாகிவிட்டாலும் இந்தியாவைப் பொறுத்த மட்டில் செயற்கைக் கருத்தரிப்பு, கருவளர்ப்பு முறைகள் இன்னமும் புதுமையாகவே இருந்து வருகின்றன.**

சென்னை ஜி. ஜி. மருத்துவ மனையைச் சேர்ந்த இத்துறை நிபுணர் டாக்டர் கமலா செல்வராஜிடம் விவரம் கேட்டபோது, "டெஸ்ட் ட்யூப் குழந்தை எப்படித் தயாராகிறது, அதற்கு எந்தச் சூழ்நிலைகளில் அவசியம் ஏற்படுகிறது என்று புரிந்து கொள்வதற்கு முன்னால் இயற்கையான கருத்தரிப்பு எப்படி நிகழ்கிறது என்று தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்" என்று ஆரம்பித்தார்.



விந்துவில் உள்ள உயிரணுக்கள்.

ஆரோக்கியமான பெண்களின் இரண்டு கருவகங்களும் (Ovaries) ஒவ்வொரு மாதமும் முட்டைகளை ஈனும். கருவகங்களிலிருந்து வெளிப்படும் முட்டைகள் கருத்தரிப்புக் குழாய்களின் (Fallopian tubes) விரல்கள் போன்ற முனைப் பகுதியால் உறிஞ்சப்படுகின்றன. உடல் உறவின்போது வெளிப்படும் ஆணின் விந்துவில் உள்ள உயிர் அணுக்கள் கருத்தரிப்புக் குழாயை அடைந்து, அங்கேயுள்ள பெண் கருவைச் சந்திக்கின்றன. ஏதேனும் ஓர் உயிர் அணு மட்டுமே பெண் கருவுடன் இணைகிறது. இந்த இணைப்பினால் ஜைகோட் (Zygote) என்ற சினைக்கரு உருவாகிறது. இந்தச் சினைக் கரு ஓர் உயிர் அணு நிலையிலிருந்து பல உயிர் அணுக்கருவாக மாறி, நான்கைந்து நாட்களில் கருத்தரிப்புக் குழாயிலிருந்து கர்ப்பப்பையைச் சென்று அடைகிறது. இரண்டு நாட்கள் வரை கர்ப்பப்பையில் மிதந்து விட்டுச் சாதாரணமாக ஓர் அணுக்கரு மட்டுமே கர்ப்பப்பையின் சுவரில் தன்னை இணைத்துக் கொண்டு வளர ஆரம்பிக்கிறது.

சில சமயங்களில் பெண்களின் கருத்தரிப்புக் குழாய்களில் இயற்கையாக அடைப்பு இருக்கலாம்; அல்லது அவை காச நோய் காரணமாகவோ, சில தவறான அறுவைச் சிகிச்சை முறைகளைக் கையாண்டதாலோ பழுதாகிப்போயிருக்கலாம். சில சமயங்களில் கருச்சினை கர்ப்பப்பையைச் சென்று



• சினைக் கரு இரண்டாகப் பிரிந்த நிலையில்.

• விந்து சேர்க்கைக்குப் பின் சினைக் கரு.

அடைவதற்கு முன்னால் கருத்தரிப்புக் குழாயி லேயே வளர ஆரம்பிப்பதால் குழாய்கள் பழுதாகும். அறுவைச் சிகிச்சை செய்து அவற்றைச் சீர் செய்யும் போது குழாய்களின் நீளம் குறையக்கூடும். இது போன்ற இயற்கை அல்லது செயற்கைக் காரணங்களால் ஒரு பெண்ணின் இரண்டு கருத்தரிப்புக் குழாய் களுமே பயனற்றுப் போனாலோ அல்லது அவள் அபூர்வமாய்க் கருத்தரிப்புக் குழாய் களை இன்றிப் பிறந்திருந்தாலோ அவளால் இயற்கையான முறையில் கருவுற்று, தாயாக முடியாது. இத்தகைய பெண்களுக்குத் தாய் மைப் பேற்றை அளிக்கக் கூடிய நவீன விஞ் ஞான முறைதான் in vitro fertilisation — அதாவது சோதனைக் குழாய்க் கருச் சேர்க்கை!

இந்த முறையை மேற்கொள்வதற்கு முன்னால் பல பரிசோதனைகளைச் செய்து பார்க்க வேண்டும். முதலில் தம்பதிகளுள் ஆணின் விந்து பரிசோதிக்கப்படுகிறது. போதுமான அளவு உயிரணுக்கள் அதில் உள்ளனவா, உயிரணுக்கள் சுறுசுறுப்புடன் இருக்கின்றனவா (அவை எப்போதும் மேல் நோக்கிச் சென்று கொண்டே இருக்க வேண்டும்); விந்துவில் நோய்க் கிருமிகள் இல்லாமல் தூய்மையாய் இருக்கின்றதா என்றெல்லாம் சோதித்துப் பார்க்க வேண்டும்.

இதற்குப் பிறகு பெண் பரிசோதிக்கப் படுகிறாள். ஆணின் விந்துவில் உள்ள உயிர ணுக்களை முறியடிக்கும் சில அபூர்வ எதிர்ப்பு அணுக்கள் பெண்ணின் உடலில் இல்லாமல் இருக்கின்றனவா, அவளுக்கு மாதவிடாய் சரியான இடைவெளியில் ஏற்படுகின்றதா; கருவகங்கள் சரியாக இயங் குகின்றனவா போன்ற விஷயங்கள் சரி பார்த்துக் கொள்ளப் படுகின்றன. பிறகு லாப்ரோஸ்கோப் என்ற தொலைநோக்குக் கருவியை வயிற்றினுள்ளே செலுத்தி அதன் மூலம் கர்ப்பப்பையின் அளவு கணக்கிடப் படுவதோடு, கருவகங்களிலிருந்து முட் டைகளை எடுக்க ஏதுவாய்க் கருத்தரிப்புக்



FEMALE REPRODUCTIVE ORGANS
(பெண் உள் உறுப்புகள்)





* லாமினு ஃப்ளோ அமைப்பினுள் முட்டைகள் ஆராயப்படுவதற்காகக் குப்பி களில் வைக்கப்பட்டுள்ளன.



* லாபரோஸ்கோப் மூலம் பெண்ணின் கரு உறுப் புக்கள் ஆராயப்படுகின்றன.



ASPIRATION WITH
LAPAROSCOPE

குழாய்களின் அமைப்பு உள்ளதா என்றும் ஆராயப் படுகிறது.

சாதாரணமாக மாதத்திற்கு ஒரு முட்டையே ஈனும் கருவகங்களை, செயற்கையாக அதிக முட்டைகளை ஈனும்படி செய்ய ஹார்மோன் ஊசிகள் அளிக்கப்படுகின்றன. மாதவிடாய் தொடங்கிய மூன்று அல்லது நான்காவது நாள் முதல், இந்த ஹார்மோன்கள் அளிக்கப்படுகின்றன. ஐந்தாவது; ஆறாவது தினங்களிலிருந்து ஒவ்வொரு நாளும் பெண்ணின் உடலில் உள்ள எல். எச். ஹார்மோன் மற்றும் ஈஸ்ட்ரோஜென், ப்ரோஜெஸ்டரோன் என்ற சுரப்பி நீர்களின் அளவு சரியான விகிதத்தில் உள்ளனவா என்று கண்காணிக்கப்படுகிறது. ஹார்மோன் தூண்டுதலால் கருவகம், ஒன்றுக்குப் பதில் இரண்டு, மூன்று அல்லது நான்கு முட்டைகளைக் கூட ஈனும். இயற்கையான செயல்பாட்டில் இரு கருவகங்களிலிருந்தும் இரு முட்டைகள், முதிர்ந்த நிலையை அடைந்து, ஈஸ்ட்ரோஜென் சுரப்பு நிலை அதனுடன் ஒத்துப் போகும் ஒரு குறிப்பிட்ட அளவை எட்டுகையில் எல். எச். ஸர்ஜ் - (L.H.Surge) என்ற ஓர் இயக்கம் கருவகத்தில் உண்டாகிறது. இந்த இயக்கம் நிகழ்ந்த கணத்திலேயே முட்டையைச் சுற்றியுள்ள நீர்ப்பை வெடித்து முட்டைகள் கருவகக் குழாயால் உறிஞ்சப்படும். இயற்கையில் இது எந்தக் கணத்தில் நிகழும் என்பதை அறுதியிட்டுச் சொல்ல முடியாதுஎன்பதால்முட்டைகளின்வளர்ச்சி அல்ட்ராசவுண்ட் முறையில் கணிக்கப்பட்டு, ஈஸ்ட்ரோஜென் அளவும் கண்காணிக்கப்பட்டு,அவை ஒத்துப் போகும் நிலையை அடையும் சமயத்தில் எல். எச். சர்ஜ் இயக்கம் செயற்கையாகத் தூண்டப்படுகிறது. இந்தத் தூண்டுதலுக்கு முப்பத்திரண்டு அல்லது முப்பத்திநான்கு மணி நேரங்கள் கழித்து, லாப்ரஸ்கோப் கருவியைக் கருவகத்துக் குள் செலுத்தி, முட்டைகளைச் சுற்றியுள்ள நீர்ப்பை வெடித்து அவை சிதறுமுன், நீர்ப்பையோடு கூடிய முட்டைகள் உறிஞ்சி, பெண்ணின் உடலிலிருந்து வெளியேற்றப்படுகின்றன.



• லாமினு ஃப்ளோவில் மைக்ரோஸ்கோப் கொண்டு ஆராய்ச்சி.

வெளியேற்றப்பட்ட கணத்திலேயே முட்டைகள் ஒரு பிரத்யேகத் திரவத்தில் இடப்படுகின்றன. அவற்றை நிபுணர் ஒருவர் மைக்ரோஸ்கோப்பின் கீழ் ஆராய்ந்து, முதிர்ந்த முட்டைகளைத் தேர்ந்தெடுக்கிறார். தேறிய முட்டைகள் உடனடியாக இன்குபேடர் எனப்படும் கணப்புப் பெட்டிக்குள் பாதுகாப்பாக் வைக்கப்பட்டு இங்கே அவை மேலும்நான்கு அல்லது ஐந்து மணி நேரங்கள் வளர்ந்து கருச்சேர்க்கைக்குத் தங்களைத் தயார்ப்படுத்திக் கொள்கின்றன.

இந்த இடைப்பட்ட நேரத்தில் கணவனிடமிருந்து விந்து பெறப்படுகிறது. ஒரு விதப் பிரத்யேகத் திரவத்தால் விந்து கழுவப்பட்டு, நீளமான குழாயில் இடப்பட்டு, ஒரு கருவிக்குள் அக்குழாய் பொருத்தப்படுகிறது. அக் கருவியின் சுழலும் இயக்கத்தால் விந்துவில் உள்ள உயிர் அணுக்கள் கடையப்படுகின்றன. வலுவான, சுறுசுறுப்பான அணுக்கள் மட்டுமே குழாயில் மேலெழும்பி நிற்கின்றன. இப்படிக் கடைந்தெடுத்த வலுவான உயிரணுக்களை மட்டுமே தனிமைப் படுத்தி எடுத்து, ஒவ்வொரு முட்டையிலும் உயிரணுக்கள் அடங்கியஒருசொட்டு திரவம் விடப்படுகின்றது. (ஒரு சொட்டு திரவத்தில் ஐம்பதாயிரம் முதல் இருநூற்றைம்பதாயிரம் அணுக்கள் வரை இருக்கும்.)



• விந்துவைக் கடைந்தெடுத்துத் தரும் கருவி.

கருச்சேர்க்கை செய்யப்பட்ட முட்டைகள் உடனடியாக மீண்டும் கணப்புப் பெட்டிக்குள் வைக்கப்படுகின்றன. இருபத்திநான்கு மணி நேரத்தில் ஒவ்வொரு சினைக் கருவும் ஓர் உயிர் அணு நிலையிலிருந்து இரண்டு உயிர் அணு நிலையை எய்துகிறது. நாற்பத்தெட்டு மணி நேரத்தில் நான்கு உயிர் அணு நிலையை அடைகிறது. இந்த நிலையில் அவை கதீடர் என்ற கருவி மூலம் பெண்ணின் கருப்

பைக்குள் செலுத்தப்படுகின்றன. அங்கே சில நாட்களுக்கு மிதந்த பிறகு, இயற்கையில் அணுக்கரு கர்ப்பப்பையின் சுவரில் தன்னை இணைத்துக்கொண்டுவளர்வதைப்போலவே இந்த அணுக் கருக்களும் வளர்கின்றன— வளர வேண்டும். ஆரம்பக் கட்டத்தில் சிறி தளவு ஹார்மோன்கள் செலுத்திக் கருத் தரிப்புக்கு உதவி செய்யப்படுகிறது. ஒரு வாரத்துக்குப்பிறகு B—HCG என்ற பரி சோதனை மூலம் கருத்தரிப்பு உறுதி செய்யப் படுகிறது.



* கணப்புப் பெட்டியும் சிலிண்டரும்.



* டாக்டர் கமலா செல்வராஜ்.

இதையெல்லாம் விளக்கிக் கூறிய பிறகு, "இவ்வளவு முயற்சிகளுக்குப் பிறகும் கருத்தரிப்பு ஏற்படாமல் போகக் கூடும். வெற்றி வாய்ப்பு நூறு சதவிகிதம் என்று அடித்துச் சொல்ல முடிந்தால் கடவுளுக்கும் நமக்கும் என்ன வித்தியாசம்?" என்றார் டாக்டர் கமலா செல்வராஜ். தொடர்ந்து, IVF செய்யப்படும் மருத்துவ மனையில் கட்டாயம் இருக்க வேண்டிய பல வசதிகள் குறித்துப் பேசினார்:

நூறு சதவிகிதம் சுத்தமும் சுகாதாரமும் அவசியம். இதைத் தவிர லாப்ராஸ்கோபி மற்றும் கருவைக் கர்ப்பப்பைக்குள் செலுத்துவது போன்ற சிகிச்சைகள் செய்யப்படும் ஆபரேஷன் தியேட்டர்கள் அடர் ஊதாக் கதிர்களால் (Ultra violet Rays) துப்புரவாக்கப்பட வேண்டும். முட்டைகளை உறிஞ்சி வெளியேற்றும் போது சுத்தமான கையுறைகளை அணிந்திருக்க வேண்டும். ஆனால் வழக்கமாக அறுவைச் சிகிச்சைகளின் போது பயன் படுத்தும் பவுடரைப் பயன்படுத்தக் கூடாது— அந்த தூசி முட்டையைப் பாதிக்கக் கூடும் என்பதால். வெளியேற்றப்பட்ட முட்டையைச் சில கணங்கள் கூடத் தாமதிக்காமல் உடனடியாகக் கணப்புப்பெட்டிக்குள் வைத்துவிட வேண்டும். மைக்ரோஸ்கோப்பின் கீழ் அவை ஆராயப்படுவதற்கு ஒரு சில கணங்களே அனுமதிக்கலாம். அந்த ஆராய்ச்சியையும் லாமினா ஃப்ளோ என்ற ஒரு கண்ணாடிக் கூண்டினுள்தான் செய்ய வேண்டும். பலமணி நேரங்கள் அடர் ஊதாக் கதிர்களைப் பாய்ச்சி அந்தக் கூண்டைத் துப்புரவாக்க வேண்டும். அதில் இயங்கும் மற்றொரு கருவி அதனுள் இருக்கும் காற்று மண்டலத்தைச் சுத்தமாக்கிக் கொண்டேயிருக்கும்.

முட்டையும் விந்துவும் பாதுகாப்புடன் இருக்க ஒரு வித திரவத்தில் (Culture Medium) அவற்றைப் போட்டு வைக்க வேண்டும். இந்தத் திரவத்தைத் தயாரிக்கத் தேவையான வசதிகளும் — (குறிப்பாக ஏராளமான தண்ணீர்) உபகரணங்களும் இந்தியாவில் இல்லை என்பதால் இந்தத் திரவங்களை இறக்குமதி செய்துதான் ஆக வேண்டும். சினைக் கருவும் ஒரு பிரத்யேகத் திரவத்தில்பாதுகாத்து வைக்கப்படுகிறது. இந்தத் திரவம் கருத்தரிப்புக் குழாயிலுள்ள திரவத்தை ஒத்திருக்கும். அதே போல் வயிற்றினுள் கரு எவ்வித சூழலில் வளர்கிறதோ, அதே மாதிரியான சூழலைக் கணப்புப் பெட்டியினுள் உருவாக்க எல்லா முயற்சிகளும் செய்யப்படுகின்றன. ஐந்து சதவிகிதம் பிராண வாயு, ஐந்து சதவிகிதம் கரியமிலவாயு, தொண்ணூறு சதவிகிதம் நைட்ரஜன் என்று மூன்றுவித வாயுக்களின் கலவை அடங்கியது கணப்புப் பெட்டி. இந்தக் கலவை ஒரு சிலிண்டரில் அடைக்கப்பட்டு அதிலிருந்து கணப்புப் பெட்டிக்குச் சென்ற வண்ணமிருக்கும். இவை யெல்லாம் கச்சிதமாக இல்லாவிட்டால் IVF வெற்றி பெற முடியாது.

இவ்வாறு நிபந்தனைகளை அடுக்கிய டாக்டர் கமலா செல்வராஜிடம் கேட்டோம்.

"செயற்கைச் சூழலை அளிப்பதிலோ கருச் சேர்க்கையின்போதோ ஏதேனும் சிறிய தவறு நேர்ந்துவிட்டால் அது பிறக்கும் குழந்தையைப் பாதிக்காதா?"

"நிச்சயமாகப் பாதிக்காது — ஏனென்றால் சிறு தவறு எங்கு நேர்ந்தாலும் கருத்தரிப்பு ஏற்படவே செய்யாது. மேலும் கருவில்

# அடுத்த இதழ்...

## செங்கல்பட்டு மாவட்டத்தில் கல்கி-I.



## அழகான ஊர்கள்; அவலமான வாழ்க்கை!

—கவர் ஸ்டோரி

## வெள்ள நிவாரணத்தில் நடந்த கொள்ளை!

—புலனாய்வுக் கட்டுரை

ஏதேனும் குறைபாடு இருந்தால் பெரும்பாலும் உடலே அதை வெளியேற்றிவிடும். செயற்கை முறை கருத்தரிப்பினால் குறைக் குழந்தைகளோ ஊனமுற்ற குழந்தைகளோ பிறப்பதற்கான வாய்ப்பு இயற்கைக் கருத்தரிப்பில் உள்ள அதே அளவினதுதான். ஆனால் ஒரே பிரசவத்தில் இரட்டைக்குழந்தைகள் பிறக்கும் வாய்ப்பு மட்டும் இயற்கை முறையைக் காட்டிலும் செயற்கை முறையில் அதிகம்.''

''பெண்ணுக்கு ஹார்மோன்கள் தந்து அதிகம் முட்டைகள் ஈனச் செய்கிறீர்கள். சாதாரணமாக ஹார்மோன் மருந்து, மாத்திரை, ஊசிகளை உபயோகிக்கக் கூடாது, நல்லதில்லை, என்று எச்சரிக்கிறார்களே?''

''எப்போதேனும் ஒருமுறை ஹார்மோன் சிகிச்சை அளிப்பதில் தவறில்லை. மேலும் நாங்கள்தான் நோயாளியின் உடலில் உள்ள ஹார்மோன் நிலைகளை விடாமல் கண்காணித்துக் கொண்டே இருப்போமே. எச்சரிக்கையுடன்தான் செயல்படுவோம்.''

''நீங்கள் விவரித்ததையெல்லாம் கேட்ட பிறகு செயற்கை முறை கருத்தரிப்பு என்பது மிகக் கடினமானது என்றும் பொருட்செலவு மிக்கது என்றும் தெரிகிறது. இவ்வளவு செலவும் சிரமமும் படுவதைக் காட்டிலும் ஒரு ஏழை அல்லது அனாதைக் குழந்தையைத் தத்தெடுத்துக் கொள்ளலாமே? நீங்கள் உங்கள் நோயாளிகளிடம் தத்தெடுத்துக் கொள்வது பற்றிப் பேசியிருக்கிறீர்களா?''

''யாருக்கோ பிறந்த குழந்தையைத் தன் குழந்தையாகப் பாவிப்பது அவ்வளவு சுலபமல்ல. அதற்கு மிகுந்த மனப்பக்குவம் வேண்டும். மேலும் அது அவர்களுடைய சொந்த விஷயம். நான் அதில் தலையிட முடியாது. ஆனால் என்னிடம் வரும் தம்பதிகள் குழந்தைக்காக ஏங்குவதைப் பார்த்தால்தான் அவர்களுடைய மனநிலை உங்களுக்குப் புரியும். எந்தத் தம்பதிக்குமே – குறிப்பாகப் பெண்களுக்கு – குழந்தை பெறுவது ஓர் உணர்வு பூர்வமான தேவை. அந்தத் தேவை சமூக, சமுதாயப் பார்வைகளாலும் நோக்குகளாலும், கட்டாயங்களாலும் மேலும் வலுப்படுத்தப் படுகிறது. என்னிடம் உதவி கேட்டு வருபவர்களிடம் 'உங்களுக்குக் குழந்தை அவசியம், வேண்டுமா? யோசியுங்கள்' என்று நான் சொன்னால் அதிர்ந்து போகிறார்கள். 'டாக்டர் உங்களுக்கு இரண்டு குழந்தைகள் இருப்பதால் நீங்கள் தைரியமாக இப்படி பேசுகிறீர்கள்' என்று என் மீதே பாய்கிறார்கள்!''

''தம்பதிகளுள் ஆணிடம் குறையிருந்து அவரால் உயிரணுக்களைத் தர முடியாமல் போனால், கணவனல்லாத வேறு ஆணிடம் விந்துதானம் பெற்றுச் செயற்கைக் கருத்தரிப்புச் செய்கிறார்கள். இதைக் கொள்கை ரீதியாக, தார்மீக ரீதியாகப் பார்த்தால் ஒப்புக் கொள்ள முடியவில்லையே?''

''இதுவும் உணர்வு பூர்வமான விஷயம்



# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி-ஃபாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மற்றும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| **3** மாதம் | 5.2 | 59.1 | 4.9 | 58.4 |
| **6** மாதம் | 6.7 | 64.7 | 6.1 | 63.7 |
| **9** மாதம் | 7.3 | 68.2 | 6.9 | 67.0 |
| **12** மாதம் | 8.4 | 73.9 | 7.8 | 72.5 |

* இது-இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது.
இது இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.

வண்ணமய பாப்பா— பராமரிப்பு வழிகாட்டி இலவசமாய் பெற்றிட இதை அனுப்புங்கள் இங்கே: க்ளிண்டியா லிமிடெட் (FPD/51) டாக்டர் அன்னி பெஸண்ட் ரோட், ஒர்லி, பம்பாய்-400 025..




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த ஃபாரெக்ஸ் அளியுங்கள்.

**ஃபாரெக்ஸ்®**

சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி

தான். தானம் தருவோர், பெறுவோரின் மனப்பக்குவத்தைப் பொறுத்தது. உணர்ச்சி வசப்படாமல், விஞ்ஞான ரீதியாக இதை அணுக வேண்டும் என்பதே என் கருத்து. விந்து தானம் பெறுவதை ஒரு சிகிச்சையாகக் கருதினால் அதில் உணர்ச்சிக்கு இடமிராது. ரத்த வங்கி போல் அமெரிக்காவில் இன்று விந்து வங்கிகளே உள்ளன. தானம் கொடுத்தவரின் உயரம், நிறம், அவரது முடி மற்றும் கண் நிறங்கள் போன்றவற்றின் அடிப்படையில் விந்து வகைப்படுத்தப்பட்டுச் சேமித்து வைக்கப் படுகிறது. விந்து தானம் மூலம் முதல் குழந்தை பெற்றவர்கள், இரண்டாவது குழந்தையையும் அதே முகமறியாத நபர் மூலம் பெற விருப்பம் தெரிவித்து வருகின்றனர். இது மட்டுமல்ல, இதற்கு மறுபுறமாக கருவகங்கள் பழுதாகி முட்டை ஈன முடியாத நிலையில் உள்ள பெண்களுக்குத் தங்கள் முட்டைகளைத் தானமாக வழங்கவும், கர்ப்புப்பை பழுதாகிக் குழந்தை பெற முடியாத நிலையில் உள்ள பெண்ணின் முட்டைகளை அவரது கணவரின் விந்தினால் சோதனைக் குழாயில் கருவுறச் செய்து; சினைக் கருவை ஆரோக்கியமான கர்ப்பப்பையில் வளர்த்து, குழந்தையைப் பெற்றுத் தரவும் பெண்களும் தயாராக இருக்கிறார்கள். மேலும் ஒரு பெண், கணவனல்லாத வேற்று ஆணின் விந்தைத் தானமாகப் பெற்று அதன் மூலம் கருத்தரிக்கும் போது அதை ஒரு சிகிச்சையாகத் தான் மேற்கொள்கிறாள். உடலுறவோ, காம எண்ணமோ ஏற்பட இதில் இடமில்லையே.''

டாக்டர் கமலா செல்வராஜ் எவ்வளவு தான் சமாதானம் சொன்னாலும் 'விந்து தானம்' என்ற நவீன முறையால் சிக்கல்களும் ஏற்படக் கூடும் என்பதை மறுக்க முடியாது. குழந்தை பெறுவது ஒரு பெண்ணின் உணர்வு பூர்வமான தேவை என்பது ஒப்புக்கொள்ளப் பட்டுள்ளது. அந்தத் தேவை பூர்த்தியாகும் போது தனது கணவனுக்கும் அதில் பங்கு உண்டு என்ற எண்ணம் திருப்தியை அதிகரிப்பதோடு தம்பதிகளுக்கிடையே நெருக்கத்தைவலுப்படுத்துகின்றதுஎன்பதும்ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையே. இந்நிலையில் விந்து தானம் மூலம் குழந்தை பெறுவதால் உணர்வு பூர்வமான அத்தேவை முழுமையாகப்பூர்த்தியாகுமா? தம்பதிகளுக்கிடையே காலப் போக்கில் மன விகாரங்களும் விரிசல்களும் ஏற்படாமல் போகும் என்பது என்ன நிச்சயம்! குழந்தை வளர்ந்து, தோற்றத்திலும், நடையுடை பாவனையிலும் அன்னியமாகத் தோன்றினால் அதை ஏற்கும் மனப் பக்குவம் தம்பதிகளுக்கு — குறிப்பாகக் கணவனுக்கு இருக்குமா? அந்தக் குழந்தைக்கே தன்னைப் பற்றிய உண்மை தெரிந்தால் மனம் பாதிக்கப்படாமல் இருக்குமா? — இந்தக் கேள்விகளுக்கெல்லாம் காலம்தான் பதில் சொல்லும்!

— சீதா ரவி.

மேலட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்: யோகா.



# ஓர் வேண்டுகோள்

சுமார் 325 ஆதரவற்ற குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருக்க இருப்பிடம், கல்வி அளித்து வரும் சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் ஆண்டுதோறும் தீபாவளி அன்று குழந்தைகளுக்குப் புத்தாடை, பட்டாசுகள், இனிப்புகள் வழங்கி தீபாவளியைச் சிறப்பாகக் கொண்டாடப் பொது மக்கள் பண உதவியோ அல்லது பொருளுதவியோ கொடுத்து உதவும்படி கேட்டுக் கொள்கிறோம்.

தாங்கள் ஆதரவற்ற குழந்தைகளுக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களை ஒரு புதிய பாதையில் கொண்டு செல்லும் ஆசிரமத்தின் அரியதொரு செயலையும், திக்கற்ற முதியோர்களுக்கு அடைக்கலம் கொடுத்து வருவதையும் அறிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறோம். எனவே இது சம்பந்தமாகத் தாங்கள் அளிக்கும் உதவி ஆதரவற்ற குழந்தைகளுக்கும், ஆசிரமத்தில் இருக்கும் முதியோர் இல்லத்தின் ஆதரவற்ற முதியோர்களும், இல்லக் குழந்தைகளும் மன மகிழ்ச்சி[illegible]ன் தீபாவளித் திரு நாளைக் கொண்டாட அவர்களுக்குப் புத்தாடைகள், பட்டா, இனிப்புகள் வழங்க ஏதுவாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியைப் பணம் அல்லது பொருட்களாக,

நிர்வாகி, ''சிவானந்த சேவாஸ்ரமம்,'' நெ 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை — 600 059, என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

# வைராக்கியம்

எவ்வளவு நாளாயிற்று சௌகாரைப் பார்த்து?

அந்தக் கண்ணாடி, கழுத்து வழிய வழிய நகை, கையில் அந்த விசிறி, ஐந்நூறு ஏக்கரா அன்னபூரணி என்ற பெத்த பெயர் வேறு. கேட்க வேண்டுமா? வறட்டுக் கௌரவம் + ஜம்பம் எல்லாவற்றையும் ஒரு கலக்குக் கலக்கிப் புழுதிகிளப்புகிறார்.

கர்ப்பிணியான தம்பியின் மனைவியை, ஜமுக்காளத்தை உருவி விழவைப்பதாம்! ஆஸ்பத்திரியில் போய் டாக்டரை மிரட்டி ஏழு மாசக்குழந்தையைப் பத்துமாதக் குழந்தை என்று சொல்லவைப்பதாம்! தம்பியை அவமானத்தில் தூக்கில் தொங்கவிடும்படி செய்வதாம்! அப்புறம் தம்பி மனைவியைச் சிறு குழந்தையுடன் துரத்திவிடுவதாம்!

வில்லனின் விஸ்தாரமான இந்தக் கொக்குதலை வெண்ணெய் ப்ளானிற்கு ஆஸ்கார் அவார்ட் என்ன, அதற்கு மேலே ஏதாவது இருந்தாலும் கொடுக்கலாம்.

பிரபு, சிவாஜி மாதிரி ஸ்டைலாக நடந்து விசில் பாராட்டைப் பெற்று விடுவது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறார் போலும். இந்தப் படத்திலும்விசில் பாராட்டு கிடைக்கிறது.

ஜனகராஜ் — மனோரமா அப்புறம் மெக்கானிக் பிரபுவிற்கு அஸிஸ்டென்டாய்க் கண்சிமிட்டும் ஓரஸ்மோகன் என்று ஜமா சேர்த்து என்ன பிரயோஜனம்? இவர்களை எல்லாம் பார்த்தாலே சிரிப்பு வந்து விடுமா என்ன? சிரிக்கவைக்க ஏதாவது செய்ய வேண்டாம்?

டூயட்ஸினில் பூ, மழை, பஞ்சு எல்லாம் தூவி அலுத்துப் போய்விடவே,புதுமையாக மயில் தோகைகளை இறைத்திருக்கிறார்கள். ஆமாம், இவ்வளவு மயில் தோகைக்கு எங்கே போனார்கள்?

ராதா விளையாட்டுக்காகக் காரில் ப்ரேக் ஷிஸ்டத்தை 'ஹோகயா' பண்ணிவிட்டு, பிரபுவை அந்தக் காரில் மலை மேல் போய் வா என்கிறார். பிரபுவும் மலை மேல் ஏறி இறங்குகிறார். அப்போ பார்த்து வில்லனின் ஆட்கள் ராதாவை 'அலேக்' செய்ய, அலாவுதீன் பூதம் போல ப்ரேக் இல்லாத காரில் வந்த பிரபு வில்லன்களுடன் மோதுகிறாரே — அந்த பிரேக் இல்லாத கார் என்ன ஆயிற்று? டைரக்டர் கோட்டை விட்டாரா? நாம்தான் கவனிக்கவில்லையா?

அதுதான்சபையில்அறிவித்துவிட்டுராதா ஏழை மாப்பிள்ளையுடன் குடித்தனம் நடத்த அம்மாவை விட்டுப் பிரிந்து போய்விடுகிறாரே, அப்புறம் கர்ப்பம் இல்லை வெறும் கலாட்டா என்று தெரிந்தவுடன் சௌகார் ஜானகி, மகளை 'வந்துவிடு உனக்கு வேறு ஒரு மாப்பிள்ளை பார்க்கிறேன்' என்று சொல்வது அவ்வளவு பாந்தமாகவா இருக்கிறது?

டம்மி ஜெய்சங்கர் ஆபரேஷனுக்குப் பணம் தேவைப்பட, தம்பிக்காரன் அந்த நேரம் பார்த்துக் கொள்ளையடித்துப்போக, பிரபு அங்கேவந்துடிஷ்யூம்செய்ய,சௌகார் 'வாங்க மாப்பிள்ளே' என்று மனதார அழைத்து — வைராக்கியத்தைச் சுபமாக முடிக்க எடுத்துக் கொண்டது தான் எவ்வளவு இழுபறி நிமிடங்கள்?

ஜெய்சங்கரைப் பார்த்தால் டி.கே. பகவதி போலவும், சௌகாரைப் பார்த்தால் வரலட்சுமி போலவும், பிரபுவைப் பார்த்தால் ஜெமினியைப் போலவும், ராதாவைப் பார்த்தால் சரோஜாதேவியைப் போலவும் தெரிகிறார்களே — ஒரு வேளை பணமா — பாசமா முன்னால் வந்துவிட்டதாலோ?

— ஜெயமன்மதன்




ஒருமித்த
கண்டனம்


நான் ஒரு தப்பும் பண்ணல்லியே!.. கோமாங்க தான் பண்ணியிருக்கார்!
திரிபாதி


பிரபாகரன்
இந்திய-இலங்கை ஒப்பந்தம்


சௌகர்யமா இங்கே நாற்காலி இருக்கே!... இப்படி வராமெ...


இந்தியக் குடிமகன்
எப்படி இருக்கே தெரியுமா?.. மகாராஜா தான்!



# கல்கி

1987 செப்டம்பர் 13
மலர் 46 இதழ் 7
பிரபவ ஆவணி 28



## சிறைச்சாலையில் கல்லூரி ஆசிரியர்கள்!

கல்லூரி ஆசிரியர்களின் வேலை நிறுத்தம் நீண்ட காலம் நீடித்து, பல நூறு பேர் சிறைப்பட்டிருப்பது மாணவர் சமுதாயத்துக்கு மட்டுமின்றி நாட்டுக்கே நல்லதல்ல. 'ஆசிரியர்கள் பிறருக்கு வழிகாட்டிகளாக விளங்க வேண்டியவர்கள் அல்லவா? அவர்களே வேலை நிறுத்தம் செய்வதா? பிறகு மாணவர் சமுதாயத்திடம் எப்படி கட்டுப்பாட்டை எதிர்பார்க்க முடியும்?' என்றெல்லாம் வினவினால், 'எந்தப் பிரச்னையானாலும் மறியல், போராட்டம், வேலை நிறுத்தம் என்ற அளவுக்கு வளர்ந்த பிறகுதானே அரசு கவனிக்க முன் வருகிறது?' என்ற எதிர்க் கேள்வி பிறக்கிறது.

சமீபத்தில்தான் மெஹறபத்ரா கமிட்டி அறிக்கையை ஏற்றுப் பல்கலைக்கழக மானியக் குழு அந்த அடிப்படையில் ஆசிரியர்களுக்குச் சம்பள விகிதங்களை நிர்ணயித்து அறிக்கை வெளியிட்டது. அதைப் பார்த்தபோது, பல படே படே ஐ. ஏ. எஸ். ஆபீஸர்கள் கூட ஏக்கப் பெருமூச்சு விட்டது உண்மை! அமைச்சர் ராஜாராம் கூட ஃபியூரி மோட்டார் சைக்கிள் வெள்ளோட்ட வைபவத்தில், "பள்ளி, கல்லூரி ஆசிரியர்களைப் பிடியுங்கள்! அவர்களிடம்தான் பணம் புழங்குகிறது; புழங்கப் போகிறது!" என்று விற்பனையாளருக்கு அறிவுரை வழங்கினார்! ராஜீவ் காந்தி பதவிக்கு வந்ததிலிருந்தே கல்வித் தரத்தை உயர்த்த வேண்டும் என்று கூறி வந்திருக்கிறார். கல்வித் தரத்தை உயர்த்துவது எனில், ஆசிரியர்கள் முழு ஈடுபாட்டுடன் உழைக்க வேண்டும். அவர்களுக்குப் பொருளாதாரப் பிரச்னைகள் இருந்தால் இது சாத்தியப்படாது. இதை உணர்ந்துதான் சம்பள விகிதங்கள் தாராளமாகவே அதிகபட்சமாக நிர்ணயிக்கப்பட்டன. மேலும் 1986 ஜனவரி முதல் இந்த அதிகரித்த சம்பளம் உண்டு என்பதால் மொத்தமாக ஒரு கணிசமான தொகை கிடைக்கவும் வாய்ப்புண்டு.

ஆக, சம்பள விகிதங்கள் ஒரு பிரச்னையல்ல என்பது தெளிவு. பிறகு எதற்காக இந்தப் போராட்டம்? "ஊதிய உயர்வில் எண்பது சதவிகிதத்தை மத்திய அரசு ஐந்து ஆண்டுகளுக்குத் தரும்; அதன் பின் முழுச் சுமையையும் மாநில அரசே ஏற்க வேண்டும்' என்று அரசு அறிக்கை கூறுகிறது. 'நூறு சதவிகித உயர்வையும், மத்திய அரசே என்றென்றும் தர வேண்டும்' என்கிறது போராட்டத்தில் இறங்கியுள்ள அகில இந்திய ஆசிரியர் சங்கம். ஒருவேளை மாநில அரசுகள் தங்களைக் கைவிட்டுவிடும் என்று ஆசிரியர்கள் அஞ்சுகிறார்களா?

அகில இந்திய ஆசிரியர் சங்கம், ஆசிரியர்களின் பணியை யாரும் மதிப்பிடக் கூடாது என்றும் அவர்களுக்கு ஒழுங்குமுறை (Code of conduct) நிர்ணயிக்கப்படக் கூடாது என்றும் வாதாடுகிறது. 'சம்பளம் மட்டும் உயர வேண்டும்; ஆனால் திறமையை மதிப்பிடக் கூடாது என்பது என்ன நியாயம்? இவர்கள் திறமையையும் நடத்தையையும் யாரும் மதிப்பிடக் கூடாது எனில், இவர்கள் மாணவர்களின் திறமையையும் நடத்தையையும் எப்படி மதிப்பிட முடியும்?' என்ற எதிர்க் கேள்விகள் எழுப்பப்படுகின்றன. இந்தப் பிரச்னைக்கு, ஆசிரியர்களின் திறமையை மேலதிகாரிகள் மட்டுமின்றி, மாணவர்களும் மதிப்பிடுவது ஒரு தீர்வாக இருக்கலாம். 'பழிவாங்கப்படுவோம்' என்ற அச்சம் இதனால் நீங்கலாம்.

ஒரே மாதிரி வேலையைச் செய்வோருக்குப் பலவித கிரேடுகள், ஊதிய விகிதங்கள் நிர்ணயிக்கப்படுவதை ஆசிரியர் சங்கம் எதிர்க்கிறது. பேராசிரியர்களிலேயே பல கிரேடுகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆராய்ச்சி செய்தவர்களுக்கு உயர்ந்த கிரேடு கிடைக்கும். 'ஆராய்ச்சிகள் செய்ய வசதிகள் எங்கே இருக்கிறது? அதற்காகும் செலவை யார் ஈடுகட்டுவது?' என்று ஆசிரியர் சங்கம் கேட்கிறது.

இவையும் இவைபோன்ற வேறு சில பிரச்னைகளும் பேச்சு வார்த்தைகளால் தீர்க்க முடியாதவை அல்ல. அரசு இதில் ரொம்பவும் கண்டிப்புக் காட்டினால், 'பழி வாங்கும் படலத்தை இப்போதே கட்டவிழ்த்து விட்ட அரசு, எதிர்காலத்தில் புதிய கல்விக் கொள்கையின் அடிப்படையில் இன்னும் என்னதான் செய்யாது?' என்ற பழிச் சொல்லுக்குப் பதிலளிக்க நேரும்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

வட்டமேஜை

# எப்படித்தான் படித்தீர்களோ?

• பிரசுரத்திற்கான தாள்கள், மை மற்றும் இதர விலை உயர்வுகளால் தங்கள் இதழின் விலையேற்றம் ஒப்புக்கொள்ளத் தக்கதே! பல்கி வரும் பத்திரிகைச் சந்தையில், குடும்பத்தில் அனைவரும் படிக்கத் தகுந்தது தங்கள் இதழ்தான் என்பதில் ஐயமில்லை. இருப்பினும் வாசக நெஞ்சங்களையும் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். அவர்களின் சூழ்நிலையை அனுசரித்துத் தங்கள் இதழின் விலையை ரூ. 1.75 க்கு ஏற்றி இருப்பின் அனைவருக்கும் மிக வசதியாய் இருந்திருக்கும்.

மேல்பட்டி (வ. ஆ.) எல். மாறன்.

• ஆண்டாண்டு காலமாக, வாசகர்களை மகிழ்வித்து, சமுதாயத் தொண்டினையும் ஆற்றி வரும், 'கல்கி'யின் விலையை ரூ. 1.50 லிருந்து, ரூ. 2/– ஆக உயர்த்தி இருப்பது, வாசகர்களாகிய எங்களுக்கு ஒன்றும் பெரிதல்லவே!

திருச்சி – 20, ஆர். அப்துல் சலாம்.

• ஏழைகளின் நிர்க்கதியான நிலையைப் படம் பிடித்துக் காட்டிய பூதலூர் முத்துவின், 'வேப்பமரத்து வெள்ளைப் பூக்கள்' கதை கண்கலங்கச் செய்துவிட்டது.

கோவை, உமார்த்தி.

• பத்து பத்திரிகையாளர் ஜோக்குகளையே என்னால் பொறுமையாகப் படிக்க முடியவில்லையே! ஏன் சார்! நீங்கள் எப்படித்தான் அத்தனையும் படித்துத் தேர்ந்தெடுத்திருப்பீர்? உமது கஷ்டம் புரிகிறது!

மேல்பட்டி, எல். தமிழரசி.

• சும்மா சொல்லக் கூடாது சார்! பரிசுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட பத்து ஜோக்குகளும் படித்தவுடன் சிரிப்பை வரவழைத்தன.

மதுரை – 1, செ. ம. கு. மாலதிப்பிரியன்.

• நதிகளைத் தேசியமயமாக்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் குன்றக்குடி அடிகளாரின் கருத்துக்கள் நியாயமானவை. அரசியல் கட்சிகள் செய்ய வேண்டிய பணிகளை அரசியலுக்கு அப்பாற்பட்ட பொது மனிதர் செய்வது, அவருக்குத் தேசத்தின் மீதிருக்கும் உண்மையான பற்றை உணர்த்துகிறது.

விழுப்புரம், சுதாப்ரியன்.

• பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டக் கலெக்டர் தாங்கள் கூறிய குறைகளைக் களைவதற்கும், ஆலோசனைகளைச் செயல்படுத்தவும் ஆக்கபூர்வமான பதில்களைப் பேட்டியில் அளித்துள்ளார். அதே போல் செயல்படுவார் என்றும் நம்புகிறோம்.

பம்பாய் – 97, ஏ. கிரி.

• அட... ஜெயமன்மதன் சார்... நீங்க டூரிங் டாக்கீஸில் படம் பார்த்துக் கூட விமரிசனம் எழுதுவதுண்டா? ஆச்சரியம்தான்! ('ஏ. எ. ஜாதியே' – படத்தை டூரிங் டாக்கீஸ்லதானே பார்த்தீங்க...?)

மதுரை – 20, எஸ். ஜே. இனியன்.

• அடேயப்பா...! இப்படியும் சில பேர் இருப்பதால்தான் ஏதோ சில நேரங்களில் மழை பெய்கிறது!

அதான் சார்...! வரும் முன் மக்களைக் காக்கத் திட்டங்கள் தீட்டிய அந்தச் சிவகங்கை நகர சபைத் தலைவரைத்தான் சொல்கிறேன்.

சீர்காழி, சண்பை. சி. சண்முகம்.

• இந்த முறை கேள்வி பதிலில் தூள் கிளப்பி விட்டீர்கள். குறிப்பாகச் சில கேள்விகளுக்குத் தங்களது சூடான பதில்களும், கேலியுடன் சொன்ன கருத்துக்களும் வேறு எந்தக் கல்கியிலும் வந்திருக்காது என்பது உண்மையாகும்.

கோவை, சி. என். சிவகுமார்.

• தலையங்கத்தில் வெளியாகியுள்ள தங்கள் ஆத்ம+ஆக்க சிந்தனை, செயலாக்கம் (நிஜமாகவே!) பெறுமானால் எண்ணற்ற இதயங்கள் நீண்ட நெடுங்காலம் அச்சமின்றி வாழும் அனுகூல நிலை உருவாகும்.

கச்சநகரம், எம். ரவீந்திரன்.

• விடுதலைப்புலிகளிடம் ராஜீவும், சிங்களப் போராளிகளிடம் ஜெயவர்த்தனவும் கலந்தாலோசித்திருந்தால் ஒப்பந்தமே நிறைவேறியிருக்காதே! போகப் போகத்தான் இந்த ஒப்பந்தத்தின் அருமை பெருமையை உணர முடியும்.

சென்னை – 16, அர. மணிவண்ணன்.

• 'தப்பினார் ஜெயவர்த்தன' தலையங்கம் சரியாக அமைந்திருந்தது. அவசரங்களும் அரசியலும் சேர்ந்து இன்னொரு குழப்பத்தை உருவாக்கியுள்ளதைத் தலையங்கம் எடுத்துக் காட்டியது.

சென்னை – 18, கிங்ஸி.

• தலையங்கம் படித்தேன். சில ஆண்டுகளாகவே சிங்களவர்களுக்குத் தமிழர் நலனில் அக்கறை காட்ட விருப்பமில்லை. அப்படியிருக்க இந்திய – இலங்கை ஒப்பந்தத்தால்தான் சிங்களவர்கள் கொதித்தெழுந்தாகத் தாங்கள் குறிப்பிட்டிருந்தது ஆச்சரியமளிக்கிறது. இந்த உடன்படிக்கையின் மூலம் முழுப் பலன் கிட்டுகிறதோ இல்லையோ, ஜெயவர்த்தனே நிலையில் மாற்றத்தை ஏற்படுத்தி வழிக்குக் கொண்டு வந்துள்ளதே!? அது வரையில் வெற்றிதான்!

சீர்காழி, ஜி. ஆர். மோகன்.

• குந்தவை, நந்தினியின் ஆழ் மனங்களில் மறைந்துள்ள காழ்ப்புணர்ச்சியினை அந்த அழகு நங்கையரின் முகபாவத்தில் அப்பட்டமாய்க் கொண்டு வந்துள்ள ஓவியரின் திறனை எவ்வளவு பாராட்டினாலும் தகும். அட்டைப்பட அழகோவியத்தைக் கண்டதும், இடியும், மின்னலும் அல்லவா நினைவுக்கு வந்தன!

காட்டூர், எஸ். அருள்மொழி.

# இலவசம்!






## ஸுப்பர்ஹீரோ 'குவளை' ஒன்று–
## ஒவ்வொரு 500 கிராம் க்ளுகோன்-டி
## பேக்கெட் வாங்கும்போதும்.

க்ளுகோன்-டி ஸூப்பர்ஹீரோ இருக்குமிடத்திலே ஒரு கலகலப்பு இருந்தே தீரும்! இப்போது ஒவ்வொரு 500 கிராம் பேக்கெட் க்ளுகோன்-டி உடனும் அழகான 'குவளை' ஒன்று இலவசமாய்ப் பெறுவீர். க்ளுகோன்-டி. உடனடி சக்தி பானம்: க்ளுகோஸ், விட்டமின்-டி கால்ஷியம் ஃபாஸ்ஃபேட் ஆகியன அடங்கியது. பூரண புத்துணர்ச்சி நல்கும் க்ளுகோன்-டி பழரசம், பால், தேநீர், காபி, தண்ணீர் இவற்றிலே கலந்து அருந்தி மகிழலாம்.



## க்ளுகோன்-டி
### ஸுப்பர்ஹீரோ மிகவிரும்பும் உடனடி சக்திபானம்.

சலுகை தற்போது தேர்ந்தெடுத்த விற்பனையிடங்களில் மட்டும்.

HTA 1182

## 23

ஆடு வெட்ட அரிவாளைக் கசாப்புக் கடைக்காரன் ஓங்க, ஒரு சந்நியாசி குறுக்கே புகுந்து 'ஆட்டை அவிழ்த்துக் கொண்டானும், ஜீவ காருண்யம் பேசினானும். ''சரி'' என்று கசாப்புக் கடைக்காரன் கத்தியைக் கீழிறக்க, அவிழ்த்துக் கொண்டிருந்த சந்நியாசியை ஆடு முட்டித் தள்ளிற்றும். விழுந்த சந்நியாசி எழுந்து நின்று 'விதிப்படி நடப்பது நடக்கட்டும்' என்று துடைத்துப் போனானும்.

அம்மாவின் அறிவீனம் முரளிக்குக் கவலை கொடுத்தது. இந்த இரண்டு உறவுகளும் கசப்பைக் கொடுத்தன.

வாசல் படியில் நின்று மனைவியும், தாயாரும் பேசுவதைக் கேட்கக் கேட்கக் குடும்பம் என்கிற விஷயமே முட்டாள்தனம் என்று தோன்றிற்று.

''எங்க வீட்டுக்கு வரவேண்டாம்னு நான் உங்களை ஒரு நாளும் சொல்லலை மாமி. எனக்கு வரச் சௌகர்யமில்லேன்னு நீங்க சொன்னதை உங்க சுதந்திரம், உங்க இஷ்டம்னு எடுத்துக் கொண்டேன். இந்த வீடு எனக்குக் கஷ்டம். எனக்கு வீடு இல்லே, குழந்தைகள் இல்லேன்னு இருந்தால் இது பெரிசாப் பட்டிருக்கும்.''

''சரி, இப்போ யார் என்ன சொன்னா?''

''உங்களை நான் என்னவோ பிரிகிற மாதிரி...''

''யாரை யார்கிட்டேர்ந்து பிரிக்க முடியும்?''

''எனக்குத் தெளிவாச் சொல்லுங்கோ. உங்க இஷ்டம் என்ன?''

''நான் வர்றது எனக்கு மரியாதைக் குறைவு.''

''புரியறது.''

''இங்கே உனக்கு வசதி குறைவுன்னும் புரியறது.''

''அப்புறம்?''

''வாரம் ஒரு நடை வந்துண்டு போயிண்டிரு.''

''சரி, அவ்வளவுதானே. எல்லா ஞாயிற்றுக்கிழமையும் இங்கே இருப்பேன். போறுமா? வரமுடியாதபோது முடியலைன்னு சொல்லி அனுப்பறேன், சரியா?''

பெண் தந்திரசாலியானவள். எல்லா ஜீவராசிகளும் தந்திரமானவை.

நிலவுடைமைச் சமுதாயம் தோன்றியபோது மனிதனுக்குத் தன் நிலம் தன் மக்களுக்கே உரிமையாக வேண்டும் என்கிற ஆசை வந்தது. அப்படி ஆசை காட்டினால்தான் அந்திமக் காலத்தில் சோறு கிடைக்கும் என்கிற தந்திரம் வந்தது. பிறந்த பிள்ளை தனக்குப் பிறந்தது தான் என்பதற்கு என்ன சாட்சி? எப்படி நம்புவது?

உடனே ஆண் பெண்களுக்குக் கற்பு என்கிற ஒரு சட்டம் போட்டான். 'வேறு எவரோடும் எதற்காகவும் தொடர்பு கொள்ளாதே. பெற்ற பிள்ளைக்கும் உன் அழகைக் காட்டாதே. இடுப்பை மூடு. உடம்பை மூடு. சேலையை உடுத்து' என்று கட்டளையிட்டான். இயற்கை கொடுத்த வரத்தை இருட்டாக்கினான். யாரும் அவள் யவ்வனத்தைப் பார்க்கக் கூடாது என்றபடி வைத்தான்.

பெண் தந்திரசாலி. எல்லா ஜீவராசிகளைப் போல அவள் தந்திரசாலி. எது கவர்ச்சியோ அது மறைக்கப்பட்டு விட்டால் தன் இருப்பு அலட்சியப்படுத்தப்பட்டு விடும். தான் புறக்கணிக்கப்பட்டு விடுவோம் என்று பயந்தாள். ஆனால் மறைக்கப்படாத இடம் எதுவென்று



# நிழல் யுத்தம்

பாலகுமாரன்



பார்த்தாள்.

கால் மறைக்கப்படவில்லை. என்ன செய்யலாம்? கொலுசு போடு; சப்தமிடட்டும். விரலுக்கு மெட்டி போடு; தட்டி, கூப்பிடட்டும். கைகளில் வளையல் போடு — சிணுங்கி அந்நியரின் நிலையழிக்கட்டும். மூக்குத்தி போடு. ராஸ்யமாய் மின்னிக் கண்சிமிட்டட்டும். காது தோடு போடு; கவரட்டும். நெற்றிக்குப் பொட்டு வை; சற்று நேரம் அந்நியன் நின்று பார்க்கட்டும்.

மறைக்கப்பட்டவை அமைதியாய் இருக்க, மறைக்கப் படாதவை பல்வேறு ரூபத்தில் மாற்றாரைக் கவர்ந்து இழுத்தன. "பார், பார்" என்று அழைத்தன.

பார்த்தார்கள்; கவரப்பட்டுக் கவிதை எழுதினார்கள். அதனையும் மிஞ்சி அதட்டினால், அழுதாள். அவள் அழுகைக்கு உலகமே தவித்தது. அபலை என்றது.

அது அவள் பிரம்மாஸ்திரம். அது தேவைப் பட்டபோது, தேவைப்பட்ட விதத்தில் பிரயோகப்படுத்தப் பட்டது. எதிரி எவராய் இருந்தாலும் நிலைகுலைய வைத்தது.

பெண் தந்திரக்காரி. உலகின் எல்லா உயிர்களும் போல அவளும் தந்திரக்காரி. தன் இருப்பின் உயர்வை, ஆளுமையை எந்தச் சமயத்திலும் விட்டுக் கொடுப்பதில்லை. சின்னக் கம்பளிப்பூச்சி கூட மயிர்க்காலெல்லாம் விஷம் தாங்கி நடக்கிறது. தொடாதே என்று சுருண்டு கொள்கிறது. தொட்டால் தொட்ட இடம் தடித்துப் போகிறது.

பெண்ணுக்குக் கண்ணில் விஷம். கண்ணீரில் விஷம். உலகின் எல்லா ஜந்துக்களிட

மும் ஏதோ ஒரு தற்காப்பு விஷயம் இருக்கிறது. லலிதா அழுததும் என்ன மாறிவிட்டது? எது புரண்டு விட்டது? அவள் இடத்தில் அவள் ராணி. அம்மா என்பவள் அவள் இடத்தை விட்டு அசைவதேயில்லை. ஆனை அலைக்கழிக்கிறார்கள். ஆனை மையமாக்கி விளையாடுகிறார்கள்.

இதுதான் உன் இடம் என்று அம்மா ஏன் சொல்லக் கூடாது. அழுகிற மருமகள் அவமானம். 'ஐயோ பாவம்' என்று அடுத்த வீடு பேசும்: 'இருக்கு — முடிஞ்சுக்கறா! மாமி எதுக்குப் பொருமணும்?' புரட்டிக் கொள்ளும். புறம் பேசும், இப்படியும் பேசும்; அப்படியும் பேசும்; பேசும் மனிதருக்கு நடுவேதான் ஜீவிதம்.

முரளி மறுநாள் காலை அம்மா பேச முற்பட்டபோது கைகூப்பினான்.

"சரி, நானும் அவளோட ஞாயிற்றுக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை வர்றேன். உன் சுயநலம் உனக்கு; அவள் சுயநலம் அவளுக்கு. நடுவில நான் கிடந்து ஏன் திண்டாடணும்? இனிமே என் சுயநலம் எனக்கு!"

புரிஞ்சுண்டு பேசு முரளி."

"புரிஞ்சு போச்சும்மா; கிளம்பு லலிதா."

"எல்லாரும் அனுசரணையாப் போகணும் முரளி."

"வாஸ்தவம்! அனுசரணைக்கு அர்த்தமே இப்பத்தான் தெரிஞ்சுது. உனக்கு 'ஹலோ' சொல்லிட்டு என் காரியத்தை நான் பண்ணிக்கணும். அவளுக்கு இரண்டு உதவிகள் பண்ணிட்டு நாலு உதவி நான் வாங்கிக்கணும். தந்திரமா நடந்துக்கணும்."

"அலுத்துக்கற மாதிரி பேசறியே."

"அலுப்புத்தான்."

"எதுக்கு?"

"இத்தனை நாட்கள் இது தெரியாம வளர்ந்துட்டோமேன்னு. வெள்ளையா இருந்துட்டோமேன்னு... யோசிக்க யோசிக்க அலுப்புத்தான்!"

"நீ பேசறது புரியலே."

"அதுதான் நல்லது. புரிஞ்சா ஏமாத்தலாம்னு தோணும். புதிரா இருக்கிறது தான் நல்லது."

"யார் யாரை ஏமாத்தறா?"

"எப்பவும் யாரையாவது ஏதாவது சொல்லி ஏமாத்திண்டிருக்கோம். யாரும் இல்லேன்னா நம்மளை நாமே ஏமாத்திண்டிருக்கோம். இதுக்கு உதாரணம் நீ. 'நான் தனியா இருக்கேன், தவிக்கிறேன். பிள்ளை உதவிக்கு இல்லே. மருமகள் சரியில்லேன்னு' அனத்த ஆரம்பிச்சுட்டே. அனத்தி அனத்தி என்னையும் நம்ப வச்சுட்டே."

"எல்லாம் கிடக்க நா பொல்லாதவளாய்ப் போயிட்டேனா?" அம்மா தலையைத் தூக்கிச் சீறினாள்.

"உனக்கு உதவி செய்யறதா என்னை நானே ஏமாத்திண்டேன். இவ கூட வம்புச் சண்டைக்குப் போனேன். எட்டி உதைச்சேன். இப்ப ஏமாத்தறது இவளுடைய முறை. சரி நான் இறங்கி வர்றேன்னு நல்லவ மாதிரி ஞாயிற்றுக்கிழமை ஞாயிற்றுக்கிழமைன்னு அக்ரிமெண்ட் போடறா. உண்மையிலேயே மூணு பேரும் மூணு பொய் சொல்லிண்டு திரியறோம். உண்மை பேசற போதே ஒத்துமையா இருக்க முடியலே. பொய் எத்தனை நாழி ஒத்துமையா இருக்கும்?"

"உனக்குப் பைத்தியம் பிடிச்சுடுத்து."

"ரொம்ப உசந்த இடம் அது. பைத்தியமாயிட்டா உறவேயில்லே. அவனை ஊர் பைத்தியம்னு ஒதுக்கும். ஊர்தான் பைத்தியம்னு அவன் ஒதுங்கிடுவான், நிஜமான சத்திய சந்தன் பைத்தியந்தான்!"

"சரி, ஞாயிற்றுக்கிழமை கூட வரவேண்டாம். முடிஞ்சபோது வாங்கோ. நாள் கிழமைல அம்மா உயிரோட இருக்காளான்னு ஒரு எட்டு எட்டிப் பார்த்துட்டுப் போங்கோ."

அம்மா, 'என்ன சொல்கிறோம், அவனுக்கு எப்படிப் பதில் தர வேண்டும்' என்ற எண்ணமே இல்லாமல் பேசினாள்.

லலிதாவுக்கு அந்தக் குறிப்பு நிம்மதியாய் இருந்தது.

பேசுவது எதுவும் தனக்குப் புரியவில்லை என்பது போல் உட்கார்ந்திருந்தாள். கால் மணி கழித்து, குழந்தையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டாள்.

"அப்போ நாங்க புறப்படறோம், மாமி" என்றாள். "அப்பாவுக்கு போன் பண்றேளா? ஆட்டோ கூட்டிண்டு வர்றேளா?"

முரளி ஆட்டோ கூட்டிக் கொண்டு வந்தான்.

வீட்டிற்குப் போனதும் சட்டை, பேண்டை உதறிவிட்டு, லுங்கியும் திறந்த மார்புமாய்த் தூங்கினான். தூக்கத்தில் கூடக் கோபக் கனவுதான் வந்தது. விழித்த பிறகு நடந்தது அனைத்தையும் மனது எடை போட்டது.

ஏரி மீது கோபித்துக் கொண்டு கால் அலம்பாமல் போவானேன்? மனிதர்கள் அனைவரும் சுயநலமிகள். எல்லா உயிரும் சுயநலம். இதுவே இயற்கை. பரஸ்பரம் உபயோகப்படுத்திக் கொள்ளத்தான் வாழ்க்கை.

மரம் கனி கொடுத்தது என்பது பெரிய பிசகு. தனக்கு முன்னே சத்தைக் கனியாக்கி, நிறமும் ருசியும் கொடுத்து உள்ளே தன் விதையைப் பொதித்து "வா, சாப்பிடு" என்று விளம்பரப்படுத்தி, வந்தவனுக்கு இது தேவையென உணர வைத்து, தின்றவன் பழக்கொட்டையை எங்கோ வீசினால், மறுபடியும் தன் இனம் தழைக்கும் என்கிற தந்திரம் இது. மரம் கனி ஈந்தது. அடேயப்பா! என்ன பொய். பசித்தவனைத் தேடி எந்த மரம் போய்த் தருகிறது? தரவேண்டும் என்று என்ன தலையெழுத்து?

லலிதாவிடமிருந்துகிடைக்கும்போகத்தை எதற்காக விடுவது? என் பிள்ளை என்கிற காரிய சந்தோஷத்தை ஏன் புறக்கணிப்பது? தாயாருக்கு உதவி என்கிற பெருமையை எதற்குக் கெடுத்துக் கொள்வது?

நாடகம் போடு. நல்லவனாய் நடி. நாலு பக்கமும் நாலு வித முகம் காட்டு. வேண்டியதை வழங்கு. வேண்டுமென்பதை வாங்கு. அனுபவி. மடிந்து போ. மரணம் நிச்சயமெனில் அம்மா என்ன, மனைவி என்ன? வாலிபத்தில் வீரியம் காட்டு. தள்ளாமையில் இரக்கம் கேள். அறிவு தெரிந்தது முதல் மங்கும் வரை நாடகம் ஆடு.

லலிதா காப்பியோடு வந்தாள். கீழே வைத்தாள். திரும்பிப் பார்த்து நடந்தாள்.

''ஏய்.''

''என்ன?''

''வந்து படு.''

லலிதா விழித்தாள்.

''படும்!''

தூங்கி எழுந்த பிறகு உடம்பு மதமதப்பு அதிகமாய் இருந்தது. பெண் உறவு கேட்டது.

''குழந்தை முழிச்சுண்டிருக்கா்ன்.''

''இருக்கட்டும்.''

''யாரும் இல்லை. அப்பா வெளியே போயிருக்கா.''

''கதவைத் தாழ் போட்டுட்டுக் குழந்தையை இங்க எடுத்துண்டு வா.''

''எதுக்கு?''

''பச்சையா சொல்லணுமா?''

லலிதா அவனை உற்றுப் பார்த்தாள்.

குழந்தையோடு அறைக்குள் வந்தாள், படுத்தாள்.

பசிக்குத் தின்னும் சோறில் ருசியில்லை, அள்ளிப் போட்டுக் கொள்ள வேண்டியது தான். பசித்தவன் உணவைப் பிரசாதம உண்ண முடிவதில்லை. உணவின் மீதும் ம பில்லை. அள்ளி அள்ளிப் போட்டுக்கொள் பிறகு தின்றதே கூடக் களைப்பு தரும்.

தந்தது.

உணவைத் தேவி என்று அழைத்தா அன்னபூரணி என்று அழைத்தால், நிதா காட்டினுல், உணவு கொஞ்சமாகும். நி னம் காட்டும். இல்லையெனில் அஜீர வரும். உணவு மனிதனை மதிக்காது போகு

போகத்தை வெறும் உணவு என் பெண் சாப்பிடும் பொருள் என்று நட ஞல் அதற்கு உண்டான விளைவு நடக் தான் செய்யும். விஷமாகும். ஆண் களை பிறகு பெண்ணுக்கு அவன் மீது அவ யாதை அதிகமாகும்.

முரளி அந்த அவமரியாதையை அதி படுத்தினுன். 'என் உடம்பை துடைச்சிட்டுப் போ' என்று வியர்த்த நெஞ்சைக் காட்டினுன். லலிதா புடவைத் தலைப்பால் துடைத்தாள். எழுந்து போனுள்.

ஷவரைத் திறந்துவிட்டு உடல் கசப்பும், மனக்கசப்பும் நீங்கக் குளித்தாள். உடம்பு சுத்தமாயிற்று. மனம் மேலும் கசந்தது.

'உன்னை என் வழிக்குக் கொண்டு வருகிறேனு, இல்லையா, பார்!' என்கிற வன்மம் வந்தது.

வ்ன்மம், வன்மம் வளர்த்தது.

(தொடரும்)

## போட்டிக் கதை — 3

இயந்திரமாய் இயங்கி அலுவல்களைக் கவனிப்பது, மற்றபடி தனிமையில், இருட்டில் தலையைக் கைகளால் தாங்கி மோனத் தவம் இருப்பது — கடந்த ஆறு மாதங்களாய்ச் சரவணனின் நித்தியப்படிகளாகி விட்டன.

அறை வாசலில் நிழலாடியது. தொடர்ந்து ஒரு கனைப்புச் சத்தம். சற்றே அதிர்ந்து நெளிந்தான் சரவணன். இழுத்துப் போர்த்திக் கொண்டு, அவன் மாமியார் கையில் காப்பிக் கோப்பையுடன். 'கோப்பையை மேஜைமேல் வைத்துவிட்டு கவிட்சைத்



தீண்டி விளக்கைத் தூண்டினாள். திரும்பிப் போக நினைத்தவள், எதையோ நினைத்துக் கொண்டு.

"தம்பி, சொல்றேன்னு தப்பா நினைச்சுக் காதீங்க. ஒரு ஆம்பிளை இப்படி எந்நேரமும் வீட்டுக்குள்ளேயே முடங்கிக்கிட்டு இருட்டிலே குருட்டு யோசனை பண்ணிக்கிட்டு இருக்கிறது அவ்வளவு சரியாப்படலே. வருத்தம், சோகம் எல்லாம் இருக்க வேண்டியதுதான். ஆனா எத்தனை நாளுக்கு? அந்தச் சண்டாளிக்குத்தான் கொடுப்பினை இல்லே. அல்பாயுசிலே போய்ச் சேர்ந்திட்டா. கட்டிக்கிட்டவ செத்துட்டாளேங்கிற சோகத்தை மனசிலே பொத்திப் பொத்தி வெச்சிக்கிட்டு ஒரு நாள் அது பொங்கி வெடிச்சு, மனசையும் உடம்பையும் கெடுத்திடும். உங்களுக்கு இதெல்லாம் தேவைதானா? அவதான் சாகறதுக்கு முன்னாலே அவளோட ஆசையை வெளிப்படையாச் சொல்லிட்டாளே..."

சண்டாளி, கொடுப்பினை இல்லாதவள், அல்பாயுசில் போனவள் என்றெல்லாம் இன்று இழவின் இழப்பு தந்த உரிமையில் செல்லமாகச் சபிக்கப்படுகிறவள், பரிமளா — ஐந்து ஆண்டுகள் சரவணனின் வாழ்க்கையில் பரிமள மணம் வீசச் செய்து, அவனது நாடி நரம்பெல்லாம் ஊர்ந்து பரவி, இதமாய், பதமாய் அவனுடன் இழைந்து, ஆனந்த ஆயாசத்தில் மெய்மறந்து... மூன்றே நாட்கள் மஞ்சள் காமாலையுடன் போராடி, ஒரு வெள்ளிக்கிழமையின் மஞ்சள் மாலையில் மஞ்சளோடு போய்ச் சேர்ந்தவள்.

சரவணன் பரிமளாவைக் கைப்பிடித்ததே அவளுடைய அடக்கம், அலைபாயாத ஆனால் கருணை பிரவகிக்கும் கண்கள், எளிமையிலும் கம்பீரமான தோற்றம், குறைவான பேச்சு ஆகிய காரணங்களுக்காகத்தான். ஒரு பெரிய தொழிற்சாலையின் அதிபரான அவன், வேலை நிமித்தம் நேர்முகத் தேர்வுக்கு வந்த அவளைத் தன் இல்லத்தரசியாக ஏற்றுக் கொண்டான்.

திருமணம் முடிந்த கையோடு சரவணன் தன் மாமியாரையும் மைத்துனியையும் தங்களுடனே வந்து இருக்கும்படி உபசார வார்த்

# அமிலச் சோதனை



தையாய்ச் சொல்ல, அதையே வேத வாக்காய் ஏற்று அவர்களும் பங்களாவில் அடியெடுத்து வைத்தார்கள்.

ஒரே உதிரத்தில் உதித்தவர்கள் என்று லும் பரிமளாவும், அவள் தங்கை மல்லிகாவும் அசாதாரணமாய் வேறுபட்டிருந்தனர்— அனைத்து விஷயங்களிலுமே.

பரிமளா சாவதற்கு முன் கடைசியாக உதிர்த்த வார்த்தைகளே தன் தங்கை மல்லிகாவின் மேல் கொண்ட பாசத்தை வெளிப்படுத்துவதாக அமைந்தன. — "அத்தான், நான் பிழைப்பேங்கிற நம்பிக்கை இல்லீங்க. நான் போயிட்டா மல்லிகாவைக் கைவிட்டுடாதீங்க. அவளுக்கு நீங்கதான் வாழ்வு கொடுக்கணும்..." அவளுக்குத்தான் என்ன ஒரு பரந்த மனம்! தங்கைக்கு நல்வாழ்வு கொடுக்கும் முகமாகக் கணவனுக்கும் எதிர்காலம் கருகாமல் இருக்குமே என்ற நல்லெண்ணம்.

ஆத்தாளும் மகளும் இப்போது தங்கள் வார்த்தைகளாலும் செயலாலும் மறைந்து போனவளின் வார்த்தைகளுக்குச் செயல் வடிவம் கொடுக்க வேண்டிப் பிரயத்தனப் பட்டுச் சரவணனை வற்புறுத்தப் பார்க்கிறார்களோ?

இரவுச் சாப்பாடு. டைனிங் டேபிளில் பதவிசாகப் பரிமாறப்படுகிறது. இப்போதெல்லாம் சரவணனுக்குப் பரிமாறுவது மல்லிகாதான். பரிமளா இருக்கும் வரையில் சிக்கன சத்துணவாக, அதே சமயம் நாசூக்கான கை மணத்தில் இருந்த சாப்பாடு கடந்த சில மாதங்களாகவே நெய், முந்திரி, இனிப்பு போன்ற பொருட்களால் அந்தஸ்து பெற்றுக்கொண்டிருந்தது.

சாப்பாட்டு மேஜையின் ச்ன்மைக்கா பளபளப்பில் பரிமாறும் பருவ மங்கையின் பிரதிபலிப்பு. எவ்விதப் படபடப்பும் இன்றி இயல்பாக இயங்குகிறாள். பரிமாறும் சாக்கில் மல்லிகாவின் ஸ்பரிசம் அவ்வப்போது

பராசரம் நீலகண்டன்

வணன் மேல் படுகிறது. தற்செயலோ?

'வணனுக்கு அவசரமாகச் சாப்பிட்டு முந்து போக வேண்டும் என்ற வெறி மூகிறது. சொந்த வீட்டிலேயே அந்நியமாக இருப்பது போன்ற நிலைமை. என்ன கொடுமை! யோசிக்க யோசிக்க அவனுக்கு இந்நிலையை இப்படியே விடக்கூடாது. ஏதேனும் செய்து இந்த அருவருப்பு நடவடிக்கைகளுக்கு ஒரு முடிவு காண வேண்டும் என்ற ஆவேசம் புறப்படுகிறது.

ஒரு வழியாகச் சாப்பிட்ட பேர் பண்ணி எழும் போது, ''மல்லிகா, உங்கிட்டே கொஞ்சம் தனியாப் பேசணுமே... நீ சாப்பிட்டுட்டு மொட்டை மாடிக்கு வர்ரியா?" என்று கேட்டான். அவள் கண்களில் ஒரு மின்னல் தோன்றி மறைந்ததைச் சரவணன் கவனிக்கத்தவறவில்லை.''இதோவந்திடறேன் மாமா'' — அவள் பதிலில் ஓர் ஆசையின் எதிர்பாப்போ?

மொட்டை மாடியின் நிலா வெளிச்சத்தில் மல்லிகா ஒயிலாக நின்றிருந்தாள்.

''என்னைப் பத்தி நீ என்ன நினைக்கறே மல்லிகா?''

அவள் ஒரு வசீகர முறுவலுடன் ஒரு சில விநாடிகள் இமைக்காமல் அவனையே பார்வையால் ஊடுருவினாள்.

''அஞ்சு வருஷமா உங்க வீட்டிலே, உங்க நிழலிலே இருக்கேன். இப்போ புதுசா நினைக்கறதுக்கு என்ன இருக்கு? நீங்க என் அக்கா புருஷன். என் வருங்காலக் கணவர், உழைப்பின் மூலமா சின்ன வயசிலேயே பெரிய தொழில் அதிபர் ஆகி ஊரிலே உள்ள பெரிய பணக்காரங்களிலே ஒருத்தரா ஆனவர். போதுமா...''

''நான் உன்னோட வருங்காலக் கணவர்னு எதை வெச்சிச் சொல்றே? உங்கக்கா சாகறதுக்கு முன்னாலே சொன்ன வார்த்தைகளை வெச்சா, இல்லேன்னா என் மேலே உனக்கு நிஜம்மாவே ஈடுபாடு இருக்கா? எதுக்குக் கேக்கறேன்னா, என்னைக் கட்டிக் கிட்டயானா நீ ரெண்டாந்தாரம்கற பேரை சுமந்துட்டுத் திரியணும். அதோட நமக்குள்ளே வயசு வித்தியாசம் பத்து வருஷங்கள் இருக்கும்...''

''என்ன மாமா அப்படிக் கேட்டுட்டீங்க? உங்கமேலேஎனக்குஎப்போதுமேமரியாதை, பக்தி உண்டு. அக்கா, அவளோட கடைசி ஆசையைச் சொல்லிட்டுப் போய்ச் சேர்ந்த வுடனே உங்க மேலே ஒரு பரிவு, அனுதாபம், காதல்னு கூடச் சொல்லலாம்... எல்லாம் ஏற்பட்டிச்சு. உங்களாலேதான் என்னோட எதிர்காலம் சிறப்பா அமையும்கற நம்பிக்கையும் வந்தாச்சு. ஒரு நல்ல இதயம் படைச்ச பணக்காரரோட மனக் கவலையை மறக்கடிக்கவும், அவரோட மறைஞ்சு போன மனைவியின் ஆசைப்படி அவளோட ஸ்தானத்தை நிரப்பவும் நான் என்னைக்கோ என் மனசைத் தயார் பண்ணிட்டேன். வயசிலே இடைவெளி இருக்குன்னு சொல்றீங்க. ஆனா மனசாலே உங்ககிட்ட ரொம்ப நெருங்கினவ நான். அஞ்சு வருஷம் உங்க வீட்டிலே அக்காவுக்கு உதவியா இருந்ததினாலே உங்களை என்னாலே புரிஞ்சுக்கிட்டு, உங்களுக்கு உதவியா, துணையா இருக்க முடியும். மனசார நான் சம்மதிக்கறப்போ ரெண்டாந்தாரம் அது இதுங்கற பேச்சுக்கு இடமே இல்லீங்க.''

''மல்லிகா, நான் எதுக்குச் சொல்றேன்னா, உன்னோட கல்யாணத்தைப் பத்தி முடிவு செய்ய வேண்டியது உன்னோட இஷ்டம். உன்னோட அக்காவோட கடைசி ஆசையைப்பூர்த்திசெய்யறேன்னு உன்னோட வாழ்க்கையை, எதிர்காலத்தை, இளமையை இதையெல்லாம் வீணாக்கிக்கக் கூடாது பாரு. அதோட, ஒருத்தர் செத்துட்டதாலே மட்டும் அவர் சொன்ன வார்த்தையை அப்படியே எடுத்துக்கணும்னு சொல்ற நாமெல்லாமே, அந்த ஆள் உயிரோட இருந்தப்போ அவரோட வார்த்தைங்களைக் கேட்டு நடந்திருக்கோமா அப்படீன்னு யோசிக்கணும்... ஒரு வாதத்துக்காகக் கேக்கறேன். உங்கக்கா சாகறதுக்கு முன்னாலே கடைசி விருப்பமா உன்னை ஒரு சாதாரண நிலையிலே இருக்கறவனுக்குக் கட்டி வைக்கணும்னு சொல்லியிருந்தான்னு வெச்சுக்கோ, நீ சம்மதிச்சிருப்பியா? அது போகட்டும் — நானே ஒரு ஏழையா இருந்து உங்கக்கா மரண வாக்குமூலப்படி என்னை நீ கட்டிக்கணும்னு ஆசைப்பட்டிருந்தா அதுக்குச் சம்மதிச்சிருப்பியா?''

மல்லிகாவின் கண்கள் சட்டென்று கூர்மை பெற்று அலை பாய்ந்தன. மறுகணமே அவள் அவனருகே இன்னமும் நெருங்கினாள். குரலை உயர்த்தி, ''மாமா, இது விதண்டாவாதம். எங்கக்கா ஆசைப்பட்டா, நான் சம்மதிக்கறேன். எங்கக்கா ஆத்மா சாந்தியடையணுங்கறதுக்காகவும், உங்க வாழ்க்கையிலே மறுபடியும் சந்தோஷம் பூக்கணுங்கறதுக்காகவும் நாம ரெண்டு பேரும் இணைஞ்சே ஆகணும். இளமை, பணம், செல்வாக்கு இதெல்லாம் நிறைஞ்சிருக்கற உங்களுக்கு நிச்சயமா ஒரு துணைவி தேவை. அது வேறே யாரோவா இருக்கறதுக்குப் பதிலா நானே ஏன் இருக்கக் கூடாது? இதோ பாருங்க மாமா, நான் உங்களவங்கறது எப்பவோ தீர்மானமான விஷயம். அது ஒரு பரிசுத்த ஆத்மாவின் கட்டளையும் கூட. நமக்குள்ளே கல்யாணம்கறது ஒரு வெறும் சடங்குதான் — வெளியாருக்கு நம் உறவைப் பத்தித் தெரியணும்கறதுக்காக. நீங்க கட்டளையிட்டீங்கன்னா இப்பவே, இந்த நிமிஷமே உங்களோட ஐக்கியமாயிடுவேன். இந்த மாதிரி வெளிப்படையாச் சொல்றதிலே இனிமேலும் தப்பேதும் இருக்கிற மாதிரி தோணலே.''

சரவணன் நிறையவே அதிர்ந்தான்.

என்ன சொல்ல வருகிறாள் இவள்? உட்கார் என்றால் படுக்கிற ரகமாயிருக்கிறாளே! எதற்கும் துணிந்தவள். கொஞ்சம் அசந்தால் என்னையே பலவந்தப் படுத்தி கற்பழித்துவிடுவாளோ! பேச்சுக்குப் பேச்சு பணம், அந்தஸ்து இவைகளே இவள் வாயில் புறப்



பட்டு எழுகின்றன.

சிந்தனையின்று விடுபட்டான் சரவணன், மேகத்தின் ஓரத்திலிருந்து சந்திரன் மெலிதாக எட்டிப் பார்த்தது.

"ரொம்ப சந்தோஷம் மல்லிகா. என் மேலே உனக்கு இவ்வளவு அபிமானம், பிடிப்பு இருக்கறதை நினைச்சு மனசெல்லாம் நிறைஞ்சிருக்கு. உன் மாதிரி ஒரு பாசம் பொழியற ஜீவனோட நெருக்கம், துணை இதெல்லாம் என் மன ஆறுதலுக்காக இப்போ எனக்குத் தேவைப்படுது. ஏன்னா, கடந்த ஒரு வருஷமாவே என்னோட தொழில் நிலவரம் சரியில்லே. கடுமையான போட்டியினாலே தயாரிப்புகளை விற்பனை செய்யறது ரொம்பவும் கஷ்டமாயிருக்கு. நிறையவே நஷ்டம். ஓவர் டிராப்ட் வாங்கறதுக்காக வீட்டுப் பத்திரத்தை பாங்கிலே வெச்சிருக்கு. தொழிலாளிங்களுக்கு அடுத்த மாச சம்பளம் கொடுக்கறதுக்கு என்ன செய்யறதுங்கற பிரச்னை இப்போ பூதாகாரமா முளைச்சிருக்கு ஏதாவது மாயாஜாலம் ஏற்பட்டு என்னோட சரிவைத் தடுக்கல்லேன்னா இன்னும் ரெண்டு மாசத்திலே தொழிற்சாலையையும், வீட்டையும் வித்துக் கடனை அடைக்க வேண்டியது தான். உங்கக்கா இருந்தபோதே இந்தச் சரிவு மெல்ல ஆரம்பிச்சுது. அவளுக்கும் இது பத்தித் தெரியும். அதனாலேதான் பொருளாதாரத்தாலே நான் இழந்துட்டாலும் என் வாழ்க்கையை இழக்கக் கூடாதுங்கறதுக்காக உன்னைக் கட்டிக்கணும்னு அவ அபிப்ராயப்பட்டிருக்கா.

"இப்போ நீ என் மேலே வெச்சிருக்கற பரிவு, பாசம் இதெல்லாம் நினைச்சா எனக்கு உடம்பிலே ஊட்டச்சத்து ஏத்தின மாதிரி தெம்பா இருக்கு. உன்னை மனைவியா ஏத்துக்கிட்டு, உன் அன்பான உபசரிப்பாலேயும், இதமான அரவணைப்பாலேயும், ஆலோசனையுடனும் தொடர்ந்து உழைச்சு இழந்த செல்வத்தையும் செல்வாக்கையும் மறுபடியும் அடையலாம்கற நம்பிக்கை ஒரு யானை பலத்தை எனக்குக் கொடுத்திடுச்சு. நன்றி மல்லிகா. நம்ம கல்யாணத்தை ரொம்பவும் சிக்கனமா ஏதாவது ஒரு கோயிலிலே நடத்திடலாம். நாளைக்கே அதுக்கான ஏற்பாடுகளைக் கவனிக்கறேன்.

மல்லிகாவின் முகம் மாறி, இருண்டதைக் கவனித்தும் கவனிக்காதது மாதிரி மாடிப் படியை நாடினான்.

சந்திரனை முற்றிலும் தப்பவிட்ட மேகம் தோல்வியால் துவண்டு புகையாய்க் கலையத் தொடங்கியது.

சரவணனின் தனி அறை. மேஜையில் வெள்ளி பிரேம் இட்ட போட்டோ ஸ்டாண்டில் பரிமளா சிரித்து உறைந்திருந்தாள்.

நாற்காலியில் சரிந்து மேஜையில் முகம் பதித்து அந்தப் புகைப் படத்திடம் மன்றாடினான் சரவணன்.

"பரிமளா, நாம் இரண்டு பேரும் கொஞ்ச காலமே சேர்ந்து வாழ்ந்திருந்தாலும், அந்த வாழ்க்கையிலே ஒவ்வொரு கணத்தையும் என்னால் மறக்க முடியாது. அந்த ரம்மியமான நாட்களை நினைத்துக் கொண்டே வாழ்க்கை முழுக்க ஓட்டிட வேண்டும் என்கிற ஆவேசம் எனக்குள்ளே. அதற்குத் தடையாய் எது வந்தாலும் என்னாலே சகித்துக் கொள்ள முடியாது. உன் தங்கைமேல் உனக்கு இருந்த பாசத்தினாலே அவளை நான் கை பிடிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டாய். உன் கடைசி ஆசையை நிறைவேற்ற வேண்டியதுதான். ஆனாலும்... என் மனத்தில் ஒரு சந்தேகம் — சுபாவமாக உன் தங்கை மனிதர்களைவிடப் பணத்தையும், அந்தஸ்தையும் அதிகமாக நேசிக்கும் ரகமோ என்று. அவளைக் கட்டிக் கொண்டால் வசை பட்டல்லவா வாழவேண்டும்? இசைபட வாழ்தல் எவ்வாறு? நித்தமும் அவள் வாயை அடைப்பதற்கும் அவளுடன் வாயாடுவதற்குமே நேரம் சரியாக இருக்கும். பின்பு உன் நினைவுகளைப் போற்றுவதற்கு நேரமேது? உன்னோடு நான் வாழ்ந்த அந்த இன்ப நாட்களை எண்ணி, அசை போட்டு, ஆனந்தித்து, ஆராதிக்க அவகாசம் ஏது?

"இப்போது ஒன்றும் தாமதமாகவில்லை. உன் தங்கையின் தீர்மானம் ஆத்மார்த்தமானதா அல்லது பேராசையின் விளைவா என்று தீர்மானிக்க அவளுக்கு ஒரு சோதனை வைத்திருக்கிறேன். என் பொருளாதார நிலை குறித்து ஒரு பொய்யைச் சொல்லியிருக்கிறேன். அதை ஜீரணித்துக் கொண்டு அவள் என்னிடம்சார்க்கப்படுவாளேயானால் அவளை நான்ஏற்றுக்கொள்கிறேன். இல்லையென்றால் அவள் வழி அவள் போகட்டும். அதனால் நானாக அவளை நிராகரித்தேன் என்ற எண்ணம் அவளுக்கும் எற்படாது. உன் வார்த்தையை மீறினேன் என்ற அவப்பெயரும் எனக்கு வராது. ஏனென்றால் முடிவு இப்போது அவள் கையில்.

"ஒன்று மட்டும் நிச்சயம். அவள் என்னை நிராகரித்துப் போனாலும் அவளுக்குத் தகுந்த மாதிரி ஓர் உத்தியோகத்துக்கு ஏற்பாடு செய்து அவளைக் காபந்து செய்வது என் பொறுப்பு. அதன் மூலம் உன் கடைசி ஆசையை ஓரளவுக்குப் பூர்த்தி செய்தவனாவேன்.

"கண்ணே, என்னுடைய இந்த ஏற்பாட்டை நீ அங்கீகரித்து மன்னிப்பாய் என்று எனக்கு நிச்சயமாகப் படுகிறது."

திரைச் சீலைகளோடு குலாவியபடி உள்ளே பிரவேசித்த தண்ணென்ற காற்று அவனை இதமாக வருட... உறங்கிப் போனான்.

காலையில் சரவணன் படிகள் இறங்கி வந்தவுடனேயே அந்த மாற்றத்தைக் கவனித்தான். அவன் இதழ்க் கடையில் அனிச்சையாக ஒரு புன்னகை.

கூடத்தில் இறைந்து கிடந்த சாமான்கள். ஒரு பெரிய பிரயாணத்துக்கான அறிகுறிகள். மாமியார், மைத்துனி இவர்களின் பொருட்கள் பெட்டிகளில் அடைக்கப்படக் காத்திருந்த கோலம்... ஒரு பெரிய வெளிநடப்புக்கான முஸ்தீபுகள்...

வெற்றிகரமான ஒரு அமிலச் சோதனையின் பின் விளைவுகள் — கழிவு, நலிவு, மிதப்புகள்...




## அத்தியாயம் 14
## இரண்டு பூரண சந்திரர்கள்



ன்று தஞ்சை நகரம் அல்லோலகல்லோலப்பட்டது. பல காலமாகத் தலைநகருக்கு வராதிருந்த இளவரசி மனம் மாறித் தஞ்சைக்கு வருகிறார் என்றால் அந்த நகர மாந்தர்களின் எக்களிப்புக்குக் கேட்பானேன்? சோழ நாட்டில் இளவரசி குந்தவையின் அழகு, அறிவு, தயாளம் முதலிய குணங்களைப் பற்றித் தெரியாதவர்கள் இல்லை. தினம் ஒரு தடவையாவது ஏதேனும் ஒரு வியாஜம் பற்றி அவருடைய பெயரைக்குறிப்பிட்டுப் பேசாதவர்களும் இல்லை. இந்த வருஷம் நவராத்திரி வைபவத்துக்கு இளவரசி தஞ்சை அரண்மனையில் வந்திருப்பார் என்ற வதந்தி முன்னமே பரவி மக்களின் ஆவலை வளர்த்திருந்தது. எனவே, இன்றைக்கு வருகிறார் என்று தெரிந்ததும் தஞ்சைக் கோட்டை வாசலில் ஒரு ஜன சமுத்திரமே காத்துக் கொண்டிருந்தது. பூரண சந்திரனுடைய உதயத்தை எதிர்பார்த்து ஆஹ்லாத ஆரவாரம் செய்யும் ஜல சமுத்திரத்தைப் போல் இந்த ஜன சமுத்திரமும் ஆர்வம் மிகுந்து ஆரவாரம் செய்து கொண்டிருந்தது.

கடைசியில், பூரண சந்திரனும் உதயமாயிற்று. ஏன்? இரண்டு நிலாமதியங்கள் ஒரே சமயத்தில் உதயமாயின! தஞ்சைக் கோட்டை வாசலண்டை குந்தவை தேவி தன் பரிவாரத்துடன் வந்து சேர்ந்தபோது, கோட்டைக் கதவுகள் தடால் என்று திறந்தன. உள்ளேயிருந்து தேவியை வரவேற்று அழைத்துப் போவதற்காக அரண்மனைப் பரிவாரங்கள் வெளிவந்தன. அந்தப் பரிவாரங்களின் முன்னணியில் இருபழுவேட்டரையர்களும் இருந்தார்கள். அதுமட்டுமல்ல; அவர்களுக்குப் பின்னால், முத்துப் பதித்த தந்தப் பல்லக்கு ஒன்றும் வந்தது. அதன் பட்டுத் திரைகள் விலகியதும் உள்ளே பழுவூர் இளையராணி நந்தினி தேவியின் சுந்தர மதிவதனம் தெரிந்தது.

குந்தவை யானையிலிருந்தும் நந்தினி பல்லக்கிலிருந்தும் இறங்கினார்கள். நந்தினி விரைந்து முன்னால்

# செல்வன்




சென்று குந்தவைக்கு முகமன் கூறி வரவேற்றாள். அந்த வரவேற்பைக் குந்தவை புன்னகை புரிந்து அங்கீகரித்தாள்.

சோழநாட்டின் அந்த இரு பேரழகிகளையும் அங்கு ஒருங்கே கண்ட ஜனத்திரளின் உற்சாகம் கரை புரண்டு ஓடியது. நந்தினி பொன் வர்ண மேனியாள்; குந்தவை செந்தாமரை நிறத்தினள். நந்தினியின் பொன் முகம் பூரண சந்திரனைப் போல் வட்ட வடிவமாயிருந்தது; குந்தவையின் திருமுகம் கைதேர்ந்த சிற்பிகள் வார்த்த சிலை வடிவத்தைப் போல் சிறிது நீள வாட்டமாயிருந்தது. நந்தினியின் செவ்வரியோடிய கருநிறக் கண்கள் இறகு விரித்த தேன்வண்டுகளைப் போல் அகன்று இருந்தன; குந்தவையின் கருநீல வர்ணக் கண்கள் நீலோத்பலத்தின் இதழைப் போல் காதளவு நீண்டு பொலிந்தன. நந்தினியின் மூக்கு தட்டையாக வழுவழுவென்று தந்தத்தினால் செய்ததுபோல் திகழ்ந்தது. குந்தவையின் மூக்கு சிறிது நீண்டு பன்னீர்ப் பூவின் மொட்டைப் போல் இருந்தது. நந்தினியின் சிறிது தடித்த இதழ்கள் அமுதம் ததும்பும் பவழச் செப்பைப் போல் தோன்றியது. குந்தவையின் மெல்லிய இதழ்களோ தேன் பிலிற்றும் மாதுளை மொட்டெனத் திகழ்ந்தது. நந்தினி தன் கூந்தலைக் கொண்டை போட்டு மலர்ச் செண்டுகளைப் போல் அலங்கரித்திருந்தாள். குந்தவையின் கூந்தலோ "இவள் அழகின் அரசி" என்பதற்கு அடையாளமாகச் சூட்டிய மணி மகுடத்தைப் போல் அமைந்திருந்தது.

இப்படியெல்லாம் அந்த இரு வனிதாமணிகளின் அழகையும் அலங்காரத்தையும் தனித்தனியே பிரித்து ஒப்பிட்டுப் பார்த்து எல்லாரும் மகிழ்ந்தார்கள் என்று சொல்ல முடியாதுதான். ஆயினும் பொதுப்படையாக இருவரும் நிகரில்லா செளந்தரியவதிகள் என்பதையும், அங்க அமைப்பிலும் அலங்காரத்திலும் மாறுபட்டவர்கள் என்பதையும் அனைவருமே எளிதில் உணர்ந்தார்கள்.

நந்தினியின் பேரில் அதுவரையில் நகர மாந்தர்களுக்கு ஓரளவு அதிருப்தியும் அசூயையும் இருந்து வந்தன. குந்தவைப் பிராட்டியை ஒவ்வொருவரும் தங்கள் குலதெய்வமெனப் பக்தியுடன்

**அமரர் கல்கி**

பாராட்டினார்கள். ஆனால் இப்போது பழுவூர் இளையராணி கோட்டை வாசலுக்கு வந்து இளையபிராட்டியை வரவேற்றது மக்களுக்கு மிகுந்த குதூகலத்தை விளைவித்தது.

மக்கள் இவ்விதம் மகிழ்ச்சியில் ஆழ்ந்திருக்கையில் நந்தினிக்கும் குந்தவைக்கும் நடந்த சம்பாஷணை மின்னலைமின்னல்வெட்டும்தோரணையில் அமைந்தது.

"தேவி! வருக! வருக! எங்களை அடியோடு மறந்து விட்டீர்களோ என்று நினைத்தோம். இளையபிராட்டியின் கருணை எல்லையற்றது என்பதை இன்று அறிந்தோம்" என்றாள் நந்தினி.

"அது எப்படி ராணி! தூரத்திலிருந்தால் மறந்து விட்டதாக அர்த்தமா? நீங்கள் பழையாறைக்கு வராதபடியால் என்னை மறந்து விட்டதாக வைத்துக் கொள்ளலாமா?" என்றாள் குந்தவை.

"தேன் மலரை நோக்கி வண்டுகள் தாமே வரும்; அழைப்பு வேண்டியதில்லை. அழகிய பழையாறைக்கு யாரும் வருவார்கள். இந்த அவலட்சணமான தஞ்சைக் கோட்டைக்குத் தாங்கள் வந்தது தங்கள் கருணையின் பெருமையல்லவா?"

"அது என்ன அப்படிச் சொல்லி விட்டீர்கள்? தஞ்சைபுரியை அவலட்சண நகரமென்று சொல்லலாமா? இங்கே சௌந்தரியத்தையே சிறைப்படுத்தி வைத்திருக்கும்போது?......" என்றாள் இளையபிராட்டி.

"நானும் அப்படித்தான் கேள்வியுற்றேன்; சக்கரவர்த்தியை இங்கே சிறைப்படுத்தி வைத்திருக்கிறார்கள் என்று. இனிமேல் கவலை இல்லை. அவரை விடுவித்துச்செல்லத்தாங்கள் வந்துவிட்டீர்கள் அல்லவா?" என்று நந்தினி கூறியபோது அவளுடைய கண்களில் மின்வெட்டுத் தோன்றி மறைந்தது.

"அழகாயிருக்கிறது! சுந்தர சோழ சக்கரவர்த்தியைச் சிறை வைக்க இந்திராதி தேவர்களாலும் முடியாது. சிறிய மனிதர்களால் எப்படி முடியும்? நான் அதைப் பற்றிச் சொல்லவில்லை. சௌந்தரிய தேவதையான நந்தினி தேவியைப் பற்றிச் சொன்னேன்......"

"நன்றாகச் சொல்லுங்கள், தேவி! அவர் காதுபட இதைச் சொல்லுங்கள். என்னைச் சிறையில் வைத்திருப்பதுபோலத்தான் பழுவூர் அரசர் வைத்திருக்கிறார். தாங்கள் கொஞ்சம் சிபாரிசு செய்து......"

"என் சிபாரிசு என்னத்துக்கு ஆகும்? தங்களை வைத்திருப்பது சாதாரண சிறையல்லவே? காதல் என்னும் சிறையல்லவா! அதிலும்......"

"ஆம், தேவி! அதிலும் கிழவருடைய காதல் சிறையாயிருந்து விட்டால் விமோசனமே இல்லை! ஏதோ 'பாதாளச் சிறை' என்கிறார்களே? அதில் அடைக்கப்பட்டவர்களாவது வெளிவரக்கூடும்! ஆனால்......"

"ஆமாம், ராணி! அதிலும் நாமாகப் போட்டுக் கொண்ட விலங்காயிருந்தால், நாமாகத் தேடிச் சென்ற சிறையாயிருந்தால், விடுதலை கஷ்டமானதுதான்!...... சீதை, கண்ணகி, நளாயினி, சாவித்திரி வழியில் வந்தவர்கள் விடுதலை தேடவும் மாட்டார்கள்!....... அதோ அங்கே என்ன அவ்வளவு கூச்சல்?" என்றாள் குந்தவைப் பிராட்டி.



ண்மையாகவே, கோட்டை வாசலுக்குச் சற்றுத் தூரத்தில் திரளாக நின்றுகொண்டிருந்த பெண்களின் நடுவிலிருந்து அந்தப்பெருங்கூச்சல்எழுந்துகொண்டிருந்தது. குந்தவையும் நந்தினியும் அவ்விடத்தைநெருங்கிப்போனார்கள். பெண்கள் பலர் ஏக காலத்தில் கூச்சலிட்டபடியால் முதலில் இன்னதென்று புரியவில்லை. பிறகு கொஞ்சம் விளங்கியது. இளையபிராட்டியை அடிக்கடி அரண்மனைக்கு வந்து பார்க்க அவர்கள் விரும்புவதாகவும், ஆகையால் நவராத்திரி ஒன்பது நாட்களும் கோட்டைக்குள் பிரவேசிப்பதில் உள்ள கட்டுக் காவல்களை நீக்கிவிட வேண்டும் என்றும் அவர்கள் கோருவதாகத் தெரிந்தது.

"ராணி! தங்கள் கணவரிடமாவது மைத்துனரிடமாவது சொல்லி, இவர்

களுடைய கோரிக்கையை நிறைவேற்றச் சொல்லுங்கள். கேவலம் இந்த ஸ்திரீகளைக் கண்டு பயப்படுவானேன்? இவர்களால் சோழ சாம்ராஜ்யத்துக்கு என்ன ஆபத்து வந்துவிடும்? பழுவூர் சகோதரர்களின் ஆணை நாலா திசையிலும் கடற்கரை வரையில் நீண்டு பரந்திருக்கிறது அல்லவா?'' என்றாள் குந்தவை.

''அது என்ன, கடற்கரையோடு நிறுத்தி விட்டீர்கள்? கடல் கடந்து அப்பாலும் அவர்களுடைய ஆணையும் அதிகாரமும் போகின்றன. இதற்கு அடையாளம் சீக்கிரமே கிடைக்கும்!'' என்று சொல்லி நந்தினி செய்த புன்னகை குந்தவையின் இருதயத்தைப் பிளந்தது. 'இந்தப் பாதகி வார்த்தையின் உட்கருத்து யாதாயிருக்கலாம்!' என்று சிந்தித்தாள்.

இதற்குள் நந்தினி பெரிய பழுவேட்டரையரைச் சமிக்ஞையால் அருகில் அழைத்து அப்பெண்களின் கோரிக்கையையும் இளையபிராட்டியின் விருப்பத்தையும் தெரிவித்தாள்.

''இளையபிராட்டியின் வார்த்தைக்கு எதிர்வார்த்தை ஏது?'' என்றார் பழுவேட்டரையர்.

பின்னர், ஜனத்திரளின் கோலாகல ஆரவாரத்தினிடையே அவர்கள் கோட்டைக்குள் பிரவேசித்தார்கள்.



ன்று முதல் சில தினங்கள் தஞ்சை நகரும் சுற்றுப் புறங்களும் அளவில்லாக் குதூகல ஆரவாரத்தில் திளைத்துக் கொண்டிருந்தன. குந்தவை தேவி தஞ்சைக்கு வந்த சமயத்தில் நவராத்திரி உற்சவம் சேர்ந்து கொண்டது. பழுவேட்டரையரும் தம்முடைய வாக்கை நிறைவேற்றினார். தங்கு தடையில்லாமல் அந்தப் பத்து நாட்களிலும் ஜனங்கள் கோட்டைக்குள் புகவும் வெளிவரவும் அனுமதித்தார். கோட்டை வாசற் கதவுகள் சதா காலமும் அகலத் திறந்திருந்தன. கோட்டைக்குள்ளே அரண்மனைகளிலும் வெளியில் ஊர்ப் புறங்களிலும் பல கோலாகல நிகழ்ச்சிகள் நடந்து வந்தன. அவற்றைக் கண்டு களிக்கப் பெருந்திரளாக மக்கள் குழுமிக் கொண்டிருந்தார்கள். அக்கூட்டங்களின் நடுவே அடிக்கடி இரண்டு பூரண சந்திரர்கள் சேர்ந்தாற் போல் உதயமாகிக் கொண்டிருந்தார்கள். அந்தக் காட்சியைக் கண்டு ஜனசமுத்திரம் பொங்கிப் பூரித்து ஆரவாரித்தது. ஆனால் வெளியில் இவ்வாறு ஒரே உற்சவ உற்சாக குதூகலமாயிருந்த போது, அந்த இரண்டு பூரண சந்திரர்களுடைய இதயப் பிரதேசங்களிலும் எரிமலைகள் பொங்கி அக்கினிக் குழம்பைக் கக்கிக் கொண்டிருந்தன. பழுவூர் இளையராணிக்கும் பழையாறை இளையபிராட்டிக்கும் ஓயாமல் போராட்டம் நடந்து கொண்டிருந்தது. சொல்லம்புகளைக் கொண்டும் விழிகளாகிய வேல்களைக் கொண்டும் அவ்விரு அழகிகளும் துவந்த யுத்தம் நடத்திக் கொண்டிருந்தார்கள். அந்தப் போராட்டத்தில் இரு பக்கமும் கூருள்ள வாள்கள் ஒன்றோடொன்று உராய்ந்த போது தீப்பொறிகள் பறந்தன. தீட்டிச் சாணை பிடித்த ஈட்டிகள் ஒன்றையொன்று தாக்கி ஜுவாலை வீசின. இருண்ட வான வெளியில் இரண்டு மின்னல்கள் ஒன்றையொன்று வெட்ட இரண்டும் சேர்ந்து துடிதுடித்தன. கொடிய அழகு வாய்ந்த இரண்டு பெண் புலிகள் ஒன்றையொன்று கட்டித் தழுவிக் கால் நகங்களினால் பிறாண்டி இரத்தம் கசியச் செய்தன. பயங்கரச் சௌந்தரியம் பொருந்திய இரண்டு நாக சர்ப்பங்கள் படம் எடுத்து ஆடி, அவற்றின் கூரிய மெல்லிய சிவந்த நாக்குகளை நீட்டி ஒன்றையொன்று விழுங்கிவிடப் பார்த்தன.

இந்த அதிசயமான போராட்டத்தில் அவர்கள் உற்சாக வெறியும் அடைந்தார்கள்; வேதனைப் பட்டு உளம் புழுங்கியும் துடித்தார்கள்.

நகர மாந்தர்களின் உற்சாகத்திலும் கலந்து கொள்ளாமல், இந்த இரு சந்திரமதிகளின் போராட்டத்தையும் புரிந்து கொள்ளாமல், ஒரே ஒரு ஆத்மா தவித்துக் கொண்டிருந்தது. கொடும்பாளூர் இளவரசி வானதிக்கு இப்போதெல்லாம் இளையபிராட்டி

யுடன் பேசுவதற்கே அவகாசம் கிடைக்கவில்லை. அக்காளுடன் கூடக் கூடப் போனுளே தவிர, வெளியில் நடப்பது ஒன்றிலும் அவள் மனம் ஈடுபடவில்லை. தனக்குள்ளே ஒரு தனிமை உலகைச் சிருஷ்டித்துக் கொண்டு அதிலேயே சஞ்சரித்து வந்தாள்.

## அத்தியாயம் 15
## இரவில் ஒரு துயரக் குரல்

சோழ நாட்டில் அக்காலத்தில் ஆடல் பாடல் கலைகள் மிகச் செழிப்படைந்திருந்தன. நடனமும் நாடகமும் சேர்ந்து வளர்ந்திருந்தன. தஞ்சை நகர் சிறப்பாக நாடகக் கலைஞர்கள் பலரைத் தோற்றுவித்தது. அந்த நாளில் வாழ்ந்திருந்த கருவூர்த் தேவர் என்னும் சிவநேசச் செல்வர் 'இஞ்சி'* சூழ் தஞ்சை நகரைப் பற்றிப் பல பாடல்களில் கூறியிருக்கிருர்.

''மின்னெடும் புருவத்துஇள மயிலனையார்
விலங்கல் செய் நாடகசாலை
இன்னடம் பயிலும் இஞ்சி சூழ் தஞ்சை''

என்று அவருடைய பாடல்களில் ஒன்று வர்ணிக்கிறது. தஞ்சை நகரில் நாடகக் கலை ஓங்கி வளர்ந்ததற்கு அறிகுறியாக நாடக சாலைகள் பல இருந்தன. அந்த நாடக சாலைகளில் எல்லாம் மிகச் சிறந்த நாடக சாலை சக்கரவர்த்தியின் அரண்மனைக்குள்ளேயே இருந்தது.

புதிய புதிய நாடகங்களைக் கற்பனை செய்து அமைக்கும் கலைஞர்கள் தஞ்சை நகரில் வாழ்ந்து வந்தனர். அதற்கு முன்னுலெல்லாம் புராண இதிகாச காவியங்களில் உள்ள கதைகளையே நாடகங்களாக அமைத்து நடிப்பது வழக்கம். சில காலமாகத் தஞ்சை நாடகக் கலைஞர்கள் வேருெரு துறையில் கவனம் செலுத்தி வெற்றி பெற்றிருந்தார்கள். சரித்திரப் புகழ்பெற்ற வீரர்களின் வரலாறுகளை அவர்கள் நாடகமாக அமைத்தார்கள். அவர்களுடைய காலத்துக்குச் சிறிது முற்பட்டவர்களின் வீரக் கதைகளையும் நாடகங்களாக்கி நடித்தார்கள். அப்படிப்பட்ட வீரர்கள் சோழ வம்சத்தில் பிறந்தவர்களைப் போல் வேறு எங்கே உண்டு? ஆகையினுல், கரிகால் வளவர், விஜயாலய சோழர், பராந்தக தேவர் முதலிய சோழ வம்சத்து மன்னர்களின் சரித்திரங்களை நாடகங்களாக்கி நடித்தார்கள்.

நவராத்திரித் திருநாளில் சக்கரவர்த்தியின் அரண்மனையில் சோழ வம்சத்து மன்னர்களின் வீர சரித்திர நாடகம் மூன்று நாட்கள் நடைபெற்றன. சித்திர விசித்திரமாக அமைத்த நாடக சாலைக்கு எதிரே அரண்மனை நிலா முற்றத்தில் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்து நாடகங்களைக் கண்டு களித்தார்கள். அரண்மனைப் பெண்டிர் அமர்வதற்கு ஒரு தனியான இடம், நீலப் பட்டு விதானத்தின் கீழ் முத்திழைத்த சித்திரத் தூண்களுடன் ஏற்பாடாகி இருந்தது. அதன் கீழ் மகாராணிகளும், இளவரசிகளும், அவர்களுடைய அந்தரங்கத் தோழிமார்களும் அமர்ந்து நாடகம் பார்த்தார்கள். அப்போதெல்லாம் குந்தவை தேவிக்கு அருகாமையிலேயே நந்தினி வந்து உட்கார்ந்தாள். இது மற்றப் பெண்களில் சிலருக்குப் பிடிக்கவில்லையென்ருலும், அதை அவர்கள் மனத்திலேயே வைத்துக்

* இஞ்சி — கோட்டை மதில்.

கொண்டு பொருமினார்களே யன்றி வேறெதுவும் செய்ய முடியவில்லை. பெரிய பழுவேட்டரையர், பழுவூர் இளையராணி இவர்களுடைய கோபத்துக்குப் பாத்திரமாக யாருக்குத்தான் துணிவு இருக்கும்? இளைய பிராட்டியே அந்தக் கர்வக்காரிக்கு அவ்வளவு மதிப்பளித்து மரியாதை செய்யும் போது மற்றவர்க்ள் எம் மாத்திரம்?

சோழ வம்ச மன்னர்களைப் பற்றிய மூன்று நாடகங்களில் மூன்றாவதான பராந்தக தேவர் நாடகம் மிகச் சிறந்து விளங்கியது. அன்றைக்குத்தான் நாடகம் பார்த்த ஜனங்களின் மத்தியில் ஒரு சிறிய சலசலப்புத் தோன்றி வளர்ந்தது.

அதுவரை சோழநாட்டை அரசு புரிந்த சோழ மன்னர் பரம்பரையில் சுந்தர சோழரின் பாட்டனாரான கோப்பர கேசரி பராந்தகர் வீரப் புகழில் சிறந்து விளங்கினார். சுமார் நாற்பத்தாறு ஆண்டுகள் இவர் ஆட்சி நடத்தினார். இவருடைய காலத்தில் சோழ சாம்ராஜ்யம் விரிந்து பரவியது. ஈழ நாட்டிலிருந்து துங்கபத்திரை நதிவரையில் அவருடைய ஆணை சென்றது. பல போர்கள் நடந்தன; மகத்தான வெற்றிகள் கிடைத்தன; 'மதுரையும் ஈழமுங்கொண்ட கோப்பர கேசரி வர்மர்' என்ற பட்டம் பெற்றார். தில்லைச் சிதம்பரத்தில் சிற்றம்பலத்துக்குப் பொன் வேய்ந்து புகழ் பெற்றார். இவருடைய வாழ்க்கையின் இறுதியில் சில தோல்விகள் ஏற்பட்டு இராஜ்யம் சுருங்கியது. ஆனால் இவருடைய வீரப் புகழ் மட்டும் குன்றவில்லை. வடக்கே இரட்டை மண்டலத்திலிருந்து கடல்போன்ற மாபெரும் சைன்யத்துடன் படையெடுத்து வந்த கன்னரதேவன் என்னும் அரசனுடன் தக்கோலத்தில் இறுதிப் பெரும் போர் நடந்தது. இப்போரில் பராந்தகருடைய மூத்த புதல்வராகிய இராஜாதித்தர், — இந்தப் பரத கண்டம் என்றும் கண்டிராத வீராதி வீரர், — படைத் தலைமை வகித்தார். கன்னரதேவனுடைய சைன்யத்தை முறியடித்துவிட்டு யானை மீதிருந்தபடி உயிர் துறந்து வீர சொர்க்கம் எய்தி




சமுத்திரம் ஆடாமல் அசையாமல் இருக்கிறபோது ஒரு காற்று அடித்தால் உடனே அதில் ஜலத்துளிகள் குமிழ்களாகத் தோன்றுகின்றன. இன்னொரு காற்று அடிக்கிற போது அந்தக் குமிழ்கள் உடைந்து போகின்றன. பரமாத்மா ஆடாத அசங்காத சமுத்திரம் மாதிரி. மாயை என்கிற காற்றினால் அதிலே ஜீவாத்மாக்கள் என்கிற நாமெல்லாம் குமிழ் மாதிரி தோன்றியிருக்கிறோம். ஆசாரியருடைய கடாக்ஷம் என்கிற நல்ல காற்று நம் மேல் பட்டால் குமிழ் உடைந்து ஜலத்துளி சமுத்திரத்தோடு ஐக்கியமாகி விடுவது போல், நாமும் பரமாத்மாவிடம் இரண்டறக் கலந்து விடுவோம்.

சமுத்திர ஜலம் என்றென்றும் அளவு குறையாமலேதான் இருக்கிறது. அதிலிருந்து ஆவி பிரிந்து சென்று மழையாகி உலகத்தில் பலவிதங்களில் நதி, ஓடை, வாய்க்கால், ஏரி, குளம், கிணறு என்று ஜலாசயங்களாக ஆகின்றன. சமுத்திரம் வற்றுவதில்லை. அதில் புதிதாக வெள்ளம் வருவதுமில்லை. அதிலிருந்து வந்த ஆறு குளங்கள் வற்றலாம். அல்லது இவற்றில் வெள்ளம் வரலாம். வெயில் நாளானால் வீட்டுக் குழாயில் ஜலம் இல்லை. ரெட்ஹில்ஸில் ஜலம் இல்லை என்கிறோம். மழைக்காலத்தில் கோதாவரியில் வெள்ளம், காவேரியில் உடைப்பு என்று பேசுகிறோம். ஆனால் சிருஷ்டி காலத்தில் இந்த உலகத்தில் எத்தனை ஜலம் இருந்ததோ அதில் ஓர் இம்மி கூட — க்ரெயின் கூட — இன்று வரை குறையவில்லை. கூடவும் இல்லை. பணக்காரர்கள் சிலர் நிலத்தை விற்று வீடு வாங்குவார்கள். வீடுகளை விற்று பாங்கில் போடுவார்கள். பாங்குப் பணத்தை 'ஷேர்'களாக மாற்றுவார்கள். மொத்த சொத்து மாறாது. அவற்றின் ரூபம்தான் பல விதத்தில் மாறும். எல்லாவற்றையும் கூட்டினால் கணக்கு சரியாக இருக்கும். அப்படியே தான் லோகத்தில் உள்ள மொத்த ஜலம் சமுத்திரத்தில் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் மேகத்தில் இருக்க வேண்டும். அல்லாது போனால் மழையாக இருக்க வேண்டும். அல்லது நதியாக, ஏரி குளங்களாக இருக்க வேண்டும்.

பரமாத்மா பலவாகத் தோன்றியிருக்கிறார். தோன்றிய பின்னும் சமுத்திரம் மாதிரி கூடாமல் குறையாமல் இருக்கிறார். நமக்குக் கூடுதல், குறைவு எல்லாம் உண்டாகிறதாகத் தோன்றுகிறது. ஆனால் உள்ளது ஒன்றேதான் என்ற ஞானம் வந்தால் எங்குமே கூடுதலும் இல்லை, குறைவும் இல்லை.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**



ணர். அந்த வீரருடைய அம்பு பாய்ந்த சடலத்தை அப்படியே ஊருக்கு எடுத்து வந்தார்கள். அரண்மனையில் கொண்டு சேர்த்தார்கள். பராந்தக சக்கரவர்த்தியும் அவருடைய தேவிமார்களும் நாட்டைப் பாதுகாப்பதற்காக உயிர் துறந்த வீரப் பெருமகனின் உடலைத் தங்கள் மத்தியில் போட்டுக் கொண்டு கண்ணீர் பெருக்கினார்கள். திரைக்குப் பின்னாலிருந்து அசரீரி வாக்கு, ''வருந்தற்க! வருந்தற்க! இளவரசர் இராஜாதித்தர் இறக்கவில்லை; சோழநாட்டு மக்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் கோயில் கொண்டு விளங்குகிறார்!'' என்று முழங்கிற்று. இந்த இறுதிக் காட்சியுடன் நாடகம் முடிவடைந்தது.

அந்தத் தலைமுறைக்கு முந்திய தலைமுறையில் நடந்த வீர சம்பவங்கள் நிறைந்த இந்த நாடகத்தை ஜனங்கள் பிரமாதமாக ரஸித்து மகிழ்ந்தார்கள். சபையோருக்குள்ளே சலசலப்பு ஏற்பட்டதன் காரணம் என்னவென்றால்; பராந்தக

தேவரது காலத்தில் நடந்த பெரும்போர்களில் அவருக்கு இரண்டு சிற்றரசர்கள் அருந்துணையாக இருந்தார்கள். ஒருவர் கொடும்பாளூர் சிற்றரசர்; இன்னொருவர் பழுவூர்க் குறுநில மன்னர். இந்த இருவரும் சோழ வம்சத்தாருடன் உறவுத் தளையினால் பிணைக்கப்பட்டவர்கள். பெண் கொடுத்துப் பெண் வாங்கியவர்கள். இருவரும் இரண்டு கரங்களைப் போல் பராந்தகருக்கு உதவி வந்தார்கள். யார் வலக்கை, யார் இடக்கை என்று சொல்லமுடியாமலிருந்தது. இருவரையும் தம் இரண்டு கண்களைப் போலப் பராந்தக சோழர் ஆதரித்து, சன்மானித்து, வந்தார். இரண்டு கண்களில் எது உயர்வு, எது தாழ்வு என்று சொல்ல முடியாதுதானே? இப்போது அதிகாரம் செலுத்தி வந்த பழுவேட்டரையர்களின் பெரிய தந்தை பராந்தகருக்கு உதவி செய்தவர். அவர் பெயர் பழுவேட்டரையர் கண்டன் அமுதனார். ஈழத்தில் உயிர் துறந்த கொடும்பாளூர்ச் சிறிய வேளாரின் தந்தைதான் (அதாவது வானதியின் பாட்டனார்) பராந்தக தேவருக்குத் துணை புரிந்த கொடும்பாளூர்ச் சிற்றரசர்.

பராந்தக தேவரின் நாடகம் நடத்தியவர்கள் மேற்கூறிய இரண்டு சிற்றரசர்களுக்குள்ளே எவ்வித உயர்வு தாழ்வும் வேற்றுமையும் கற்பியாமல் மிக ஜாக்கிரதையாகவே நாடகத்தை ஒத்திகை செய்திருந்தார்கள். இருவருடைய வீரப் புகழும் நன்கு வெளியாகும்படி நடித்தார்கள். பராந்தக தேவர் அந்த இரு வீரர்களையும் சமமாகச் சன்மானித்ததைக் குறிப்பாக எடுத்துக் காட்டினார்கள்.

ஆன போதிலும் நாடகம் பார்த்த சபையோர் அத்தகைய் சமபாவத்தைக் கொள்ள



வில்லையென்பது சீக்கிரத்திலேயே வெளியாயிற்று. அவர்களில். சிலர் கொடும்பாளூர்க் கட்சி என்றும் வேறு சிலர் பழுவூர்க் கட்சி என்றும் தெரிய வந்தது. கொடும்பாளூர்த் தலைவன் வீரச்செயல்புரிந்ததைநாடக மேடையில் காட்டிய போது சபையில் ஒரு பகுதியார் ஆரவாரம் செய்தார்கள். பழுவூர் வீரன் மேடைக்கு வந்ததும் இன்னும் சிலர் ஆரவாரித்தார்கள். முதலில் இந்தப் போட்டி சிறிய அளவில் இருந்தது. வரவரப் பெரிதாகி வளர்ந்தது. நாடகத்தின் நடுநடுவே ."நாவலோ* நாவல்!" என்னும் சபையோரின் கோஷம் எழுந்து நாலு திசைகளிலும் எதிரொலியைக் கிளப்பியது.

சபையில் எழுந்த இந்தப் போட்டி கோஷங்கள் குந்தவை தேவிக்கு உற்சாகத்தை அளித்தன. கொடும்பாளூர் கட்சியின் கோஷம் வலுக்கும் போது பக்கத்திலிருந்த கொடும்பாளூர் இளவரசியைத் தூண்டி, "பார்த்தாயா, வானதி! உன் கட்சி இப்போது வலுத்து விட்டது!" என்பாள். கள்ளங்கபடமற்ற வானதியும் அதைக் குறித்துத் தன் மகிழ்ச்சியைப் புலப்படுத்துவாள். பழுவூர்க் கட்சியாரின் கோஷம் வலுக்கும் போது இளைய பிராட்டி நந்தினியைப் பார்த்து, "ராணி! இப்போது உங்கள் கட்சி பலத்து விட்டது!" என்பாள். ஆனால் இது நந்தினிக்கு உற்சாகமூட்டவில்லை என்பதை அவள் முகக்குறி புலப்படுத்தியது. இந்த மாதிரி ஒரு போட்டி ஏற்பட்டதும், அதிலே ஜனங்கள் பகிரங்கமாக ஈடுபட்டுக் கோஷமிடுவதும், இளைய பிராட்டி அதை மேலும் தூண்டி விட்டு வருவதும், அந்த அற்பச் சிறுமி வானதியையும் தன்னையும் ஒரு நிறையில் சமமாக வைத்துப் பரிகசிப்பதும் நந்தினியின் உள்ளக் கனலைப் பன்மடங்கு வளர்த்து வந்தது. கோபித்துக் கொண்டு எழுந்து போய் விடலாமா என்று பல தடவை தோன்றியது. அப்படிச் செய்தால் அந்தப் போட்டியைப் பிரமாதப்படுத்தித் தன் தோல்வியை ஒப்புக் கொண்டதாகும் என்று எண்ணிப் பழுவூர் ராணி பல்லைக் கடித்துக் கொண்டிருந்தாள்.



தையெல்லாம் குந்தவை கவனித்து வந்தாள். நந்தினியின் மனோநிலையைக் கண்ணாடியில் பார்ப்பது போல் அவளுடைய முகத்தோற்றத்திலிருந்து தெரிந்து கொண்டு வந்தாள். ஆனால் வேறொரு விஷயம் இளைய பிராட்டிக்குத் தெரியாத மர்மமாயிருந்தது.

போரில் பாண்டிய மன்னன் தோல்வியடைந்தது, அவன் இலங்கை மன்னனிடம் சென்று சரணாகதி அடைந்தது, இலங்கை மன்னனிடம் உதவி பெறாமல் மணி மகுடத்தையும், இரத்தின ஆரத்தையும் அங்கேயே விட்டுவிட்டுச் சேர நாட்டுக்கு ஓடியது முதலியவற்றை நாடகத்தில் காட்டிய போது சபையோர் அனைவருமே அளவிலா உற்சாகத்தைக் காட்டினார்கள். ஆனால் நந்தினியின் முகம் மட்டும் அப்போதெல்லாம் மிக்க மன வேதனையைப் பிரதிபலித்தது. இதன் காரணம் என்னவென்பது பற்றி இளைய பிராட்டி வியப்புற்றாள். கொஞ்சம் பேச்சுக் கொடுத்துப் பார்க்கலாம் என்று எண்ணி, "சக்கரவர்த்தியும் நம்முடன் இருந்து இந்த அருமையான நாடகத்தைப் பார்க்க முடியாமற் போயிற்றே? பாட்டனார் சாதித்த இக்காரியங்களை இவரும் தம் காலத்தில் சாதித்திருக்கிறார் அல்லவா? அப்பாவுக்கு மட்டும் உடம்பு குணமானால்?......" என்றாள்.

"தானே உடம்பு குணமாகி விடுகிறது. அவருடைய செல்வப் புதல்வியும் இங்கு வந்து விட்டீர்கள். இலங்கையிலிருந்து மூலிகையும் சீக்கிரம் வந்துவிட்டால் சக்கரவர்த்திக்கு நிச்சயம் உடம்பு குணமாகிவிடும்" என்றாள் நந்தினி.

"இலங்கையிலிருந்து மூலிகை வருகிறதா? அது என்ன?" என்றாள்

* இந்த நாளில் உற்சாகத்தையும் ஆதரவையும் காட்டுவதற்கு ஜனங்கள் ஜயகோஷம் செய்வது போல் அக்காலத்தில் "நாவலோ நாவல்!" என்று சத்தமிடுவது வழக்கம்.

குந்தவை.

"தெரியாதவரைப் போல் கேட்கிறீர்களே? இலங்கையிலிருந்து மூலிகை கொண்டு வரப் பழையாறை வைத்தியர் ஆள் அனுப்பியிருக்கிறாராமே? தாங்கள்தான் ஆள் கொடுத்து உதவினீர்கள் என்று கேள்விப்பட்டேனே? அது பொய்யா?"

குந்தவை பல்லினால் உதட்டைக் கடித்துக் கொண்டாள். பார்ப்பதற்கு முல்லை மொக்கைப் போல் பல்வரிசை அழகாயிருந்தாலும் கடிக்கப்பட்ட உதடுகளுக்கு வலிக்கத்தான் செய்தது. நல்லவேளையாக, "நாவலோ நாவல்!" என்னும் பெருங்கோஷம் அச்சமயம் எழுந்தபடியால் அந்தப் பேச்சு அத்துடன் தடைப்பட்டது.

சுந்தர சோழரின் வண்மையும் வனப்பும் ஆயுளும் அரசும் வாழ்கென வாழ்த்திவிட்டு நாடகம் முடிவடைந்தது. சபையோர் கலைந்து ஆனந்தக் குதூகலத்தினால் ஆடிக்கொண்டு தத்தம் வீடு சென்றார்கள். சிற்றரசர்களின் தேவிமார்களும் அவர்களுடைய பரிவாரங்களும் சென்றார்கள். பின்னர், சக்கரவர்த்தினி வானமகாதேவியும் மற்றுமுள்ள அரண்மனைப் பெண்டிரும் சோழர் குல தெய்வமான துர்க்கையம்மன் ஆலயத்துக்குப் புறப்பட்டார்கள்.

சுந்தர சோழர் உடல் நலம் எய்தும்படி மலையமானின் புதல்வி பல நோன்புகள் நோற்று வந்தார். துர்க்கை அம்மன் கோயிலுக்கு அடிக்கடி சென்று அவர் பிரார்த்தனை செலுத்துவது உண்டு. நவராத்திரி ஒன்பது நாட்கள் ராத்திரியும் துர்க்கை அம்மனுக்கு விசேஷ பூஜைகள் நடந்தன. சக்கரவர்த்தியின் சுகத்தைக் கோரிப் பலிகள் இடப்பட்டன. ஒவ்வொரு நாள் இரவும் மகாராணி கோயிலுக்குச் சென்று அர்த்த ஜாம பூஜைக்குப் பிறகு திரும்புவது வழக்கம். அரண்மனையின் மூத்த பெண்டிர் பலரும் மகாராணியுடன் ஆலயத்துக்குச் செல்வார்கள்.

இளம் பெண்களை துர்க்கை சந்நிதிக்கு அழைத்துப் போகும் வழக்கமில்லை. பூசாரிகள் மீது சில சமயம் சந்நதம் வந்து அகோரமாக ஆடுவார்கள். சாபம் விளைந்த வரலாறுகளைச் சொல்லுவார்கள். இளம் பெண்கள் பயப்படக் கூடும் என்று அழைத்துப் போவதில்லை.

ஆனால் இளையபிராட்டியிடம், "நீ பயந்துகொள்வாய்!" என்றுசொல்லி நிறுத்த யாருக்குத் தைரியம் உண்டு? அந்த ஒன்பது தினமும் தாய்மார்களுடன் குந்தவையும் துர்க்கை கோயிலுக்குச் சென்று அம்மனுக்குப் பிரார்த்தனை செலுத்தி வந்தாள். இச்சமயங்களில் வானதி தனியாக அரண்மனையில் இருக்க வேண்டி நேர்ந்தது.

பராந்தக தேவர் நாடகம் நடந்த அன்று இரவு வானதியின் உள்ளம் உற்சாகத்தினால் பூரித்திருந்தது. தன் குலத்து முன்னோர்கள் செய்த வீரச் செயல்களை அரங்க மேடையில் பார்த்து அவளுக்குப் பெருமிதம் உண்டாகியிருந்தது. அத்துடன் இலங்கை நினைவும் சேர்ந்து கொண்டது. ஈழப் போரில் இறந்த தன் தந்தையின் நினைவும், தந்தையின் மரணத்துக்குப் பழி வாங்கி வரச் சென்றிருக்கும் இளவரசரின் நினைவும் இடைவிடாமல் எழுந்தன. தூக்கம் சிறிதும் வரவில்லை. கண்ணிமைகள் மூடிக் கொள்ள மறுத்தன. இளையபிராட்டி

— 'சேலம் நீலா'



ஆலயத்திலிருந்து திரும்பி வந்து அன்றைய நாடகத்தைப் பற்றி அவருடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தால் பிறகு தூக்கம் வரலாம்; அதற்குமுன் நிச்சயமாக இல்லை.

வெறுமனே படுத்துப் புரண்டு கொண்டிருப்பதைக் காட்டிலும் அரண்மனை மேன்மாடத்தில் சற்று உலாவி வரலாமே என்று தோன்றியது. மேன்மாடத்திலிருந்து பார்த்தால் தஞ்சை நகரின் காட்சி முழுவதும் தெரியும். துர்க்கை ஆலயத்தைக் கூடப் பார்த்தாலும் பார்க்கலாம்.— இவ்விதம் எண்ணிப் படுக்கையை விட்டு எழுந்து சென்றாள். அந்த அரண்மனைக்கு வானதி புதியவள் தான். ஆயினும் மேன்மாட நிலா முற்றத்தைக் கண்டுபிடிப்பது அவ்வளவு ஒன்றும் கஷ்டமாயிராது. நீள நெடுகப் பாதைகளும் இருபுறமும் தூண்களும் தூங்கா விளக்குகளும் இருக்கும் போது என்ன கஷ்டம்?

பாதைகள் சுற்றிச் சுற்றிச் சென்று கொண்டிருந்தன. முன்னிரவில் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்த விளக்குகள் பல அணைந்து விட்டன. சில புகை சூழ்ந்து மங்கலாக ஒளி தந்தன. ஆங்காங்கு பாதை முடுக்குகளில் தாதிமார்கள் படுத்தும் சாய்ந்தும் தூங்கிக் கொண்டிருந்தார்கள். அவர்களை எழுப்பி வழி கேட்க இஷ்டப்படாமல் வானதி மேலும் சென்று கொண்டிருந்தாள். அந்த அரண்மனைப் பாதைகளுக்கு ஒரு முடிவேயில்லை போலத் தோன்றியது.

திடீரென்று ஒரு குரல் கேட்டது. அது தீனமான துயரக் குரலாகத் தொனித்தது. வானதிக்கு ரோமாஞ்சனம் உண்டாயிற்று. உடம்பு நடுங்கியது. அவளுடைய கால்கள் நின்ற இடத்திலேயே நின்றன.

மறுபடியும் அந்த அபயக் குரல்.

"என்னைக் காப்பாற்றுவார் யாருமில்லையா?"

"ஆகா! இது சக்கரவர்த்தியின் குரல் போல அல்லவா இருக்கிறது? என்ன ஆபத்தோ தெரியவில்லையே? உடல் நோயின் கோளாறு? அல்லது வேறு ஏதாவது இருக்குமா? சக்கரவர்த்தினி முதலிய மூத்த பெண்டிர் அனைவரும் கோயிலுக்குச் சென்று விட்டார்களே? சக்கரவர்த்திக்குப் பக்கத்தில் யாரும் இல்லாமலா இருப்பார்கள்? ஆயினும் போய்ப் பார்க்கலாம்.

நடுங்கிய கால்களை மெதுவாக எடுத்து வைத்து வானதி மேலும் சில அடிகள் நடந்தாள். குரல் கீழேயிருந்து வருவதாகத் தோன்றியது. அந்த இடத்தில் பாதையும் முடிந்தது. குனிந்து பார்த்தால் கீழே ஒரு விசாலமான மண்டபம் தெரிந்தது. ஆகா! சக்கரவர்த்தியின் சயனக்கிரஹம் அல்லவா இது? ஆம்; அதோ சக்கரவர்த்திதான் படுத்திருக்கிறார்; தன்னந்தனியாகப் படுத்திருக்கிறார். மேலும் அவர் ஏதோ புலம்புகிறார். என்னவென்று கேட்கலாம்!

"அடி பாவி! உண்மைதானடி! நான் உன்னைக் கொன்றுவிட்டது உண்மைதான்! வேண்டுமென்று கொல்லவில்லை. ஆனாலும் உன் சாவுக்கு நான்தான் காரணம். அதற்கு என்ன செய்யச்சொல்கிறாய்? வருஷம் இருபத்தைந்து ஆகிறது. இன்னமும் என்னை விடாமல் சுற்றுகிறாயே? உன் ஆத்மாவுக்குச் சாந்தி என்பதே கிடையாதா? எனக்கும் அமைதி தரமாட்டாயா? என்ன பிராயச்சித்தம் செய்ய வேண்டுமோ, சொல்! அந்தப்படி செய்து விடுகிறேன். என்னை விட்டுவிடு!...... ஐயோ! என்னை இவளுடைய கொடுமையிலிருந்து விடுவிப்பார் யாருமில்லையா? எல்லாரும் என் உடல்நோய்க்கு மருந்து தேடுகிறார்களே! என் மனநோயைத் தீர்த்துக் காப்பாற்றுவார் யாரும் இல்லையா!...... போ! போ! போய்விடு!...... இல்லை, போகாதே! நில்! நான் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லிவிட்டுப் போ! இப்படி மௌனம் சாதித்து என்னை வதைக்காதே! வாயைத் திறந்து ஏதாவது சொல்லிவிட்டுப் போ!"

இந்த வார்த்தைகள் வானதியின் காதில் இரும்பைக் காய்ச்சி விடுவது போல் விழுந்தன. அவளுடைய உச்சந்தலை முதல் உள்ளங்கால் வரையில்

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்







சத்துமிகுந்த,சுவையான பிஸ்கட்.

LINTAS BIN MB 10 2517 TM

குலுங்கியது. தன்னையறியாமல் கீழே குனிந்து பார்த்தாள். மண்டபத்தில் நாலாபுறமும் அவளுடைய பார்வை சென்ற வரையில் பார்த்தாள்.

சக்கரவர்த்திக்கு எதிரில் சற்றுத் தூரத்தில் ஓர் உருவம் நின்று கொண்டிருந்தது. அது பெண்ணின் உருவம். பாதி உருவம்தான் தெரிந்தது. பாக்கிப் பாதி தூண் நிழலிலும் அகில் புகையிலும் மறைந்திருந்தது. தெரிந்த வரையில் அந்த உருவம்... ஆ! பழுவூர் இளைய ராணியைப் போல அல்லவா இருக்கிறது? இது என்ன கனவா! சித்தப் பிரமையா? இல்லை! உண்மையேதான்! அதோ அந்தத் தூண் மறைவில் ஒளிந்து நிற்பது யார்? பெரிய பழுவேட்டரையர் அல்லவா? சந்தேகமில்லை! அவர்கள்தான்! பழுவூர் இளைய ராணியைப் பார்த்து விட்டா சக்கரவர்த்தி அப்படியெல்லாம் பேசுகிறார்? "உன்னைக் கொன்றது உண்மைதான்" என்று அலறினாரே, அதன் பொருள் என்ன?......

திடீரென்று வானதிக்கு மயக்கம் வரும்போலிருந்தது; தலை சுற்றத் தொடங்கியது, இல்லை, அந்த அரண்மனையே சுற்றத் தொடங்கியது. சீச்சீ! இங்கே மயக்கமடைந்து விழக்கூடாது; கூடவே கூடாது.

பல்லைக் கடித்துக்கொண்டு வானதி அங்கிருந்து சென்றாள். ஆனால் திரும்பிச் செல்லும் பாதை தொலையாத பாதையாயிருந்தது. அவள் படுத்திருந்த அறை வரவே வராது போல் தோன்றியது. முடியாது; இனிமேல் நடக்க முடியாது; நிற்கவும் முடியாது.........

குந்தவைப் பிராட்டி கோயிலிலிருந்து திரும்பி வந்தபோது வானதி அவள் அறைக்குச் சற்றுத் தூரத்தில் நடைபாதையில் உணர்வற்றுக் கட்டை போல் கிடப்பதைக் கண்டாள்.

(தொடரும்)

---

# கட்டுக் கட்டாகப் பட்டங்கள்!



டாக்டர் ஸ்ரீகாந்த் ஜிச்கர் சமீபத்தில் தத்துவத்தில் எம்.ஏ.
பட்டம் வாங்கியிருக்கிறார். இரண்டு தங்க மெடல்களுடன் பெறப்.
பட்ட இது, இவரது ஆறாவது எம். ஏ. டிகிரி — இதற்கு முன்
சமஸ்கிருதம், சமூக இயல், சரித்திரம் —ஆங்கில இலக்கியம்,
பொது நிர்வாகம், பொருளாதாரம், இவற்றில் எம். ஏ. டிகிரி
வாங்கியாகிவிட்டது.

இது தவிர சட்டம், வர்த்தக நிர்வாகம் ,பத்திரிகை இயல்
இவற்றிலும் பட்டங்கள் பெற்றுள்ளார்.

எம். பி. பி. எஸ். டாக்டர் டிகிரியும் அதில் மேல்படிப்புப்
பட்டமும் வாங்கியாகி விட்டது. கூடவே ஐ. பி. எஸ். (போலீஸ்);
ஐ. ஏ. எஸ். ஆகியவையும் பாஸ் செய்துள்ளார்.

டாக்டர் ஜிச்கர் மகாராஷ்டிர மந்திரி சபையில் ஓர் அமைச்சர்.
இந்தியாவில் எந்த மாநிலத்திலுமே டாக்டர் ஜிச்கரைவிட அதிக பட்டங்கள் வாங்கிய அமைச்சர்
இருக்க முடியாது.

— செம்பூர் சந்துரு

# ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கியின் பெருகிவரும் கூட்டத்திலே சேருங்கள்.




**ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன். பெண் – அழகுப் படைப்பாளர் லக்மே அளிப்பது.**

ஏராளமான பெண்கள் ஸாஃப்ட் அன்ட் ஸில்க்கி ஹேர் மூவிங் லோஷனின் பெருகிவரும் கூட்டத்திலே சேர்ந்து நகிறார்கள். இதில் வியப்பில்லையே! காரணம், ஸாஃப்ட் அன்ட் ல்க்கி லோஷன் உபயோகிப்பதற்கு மிகவும் வசதியானது.

இது சீராகவும் எளிதாகவும் பரவுகிறது.

அதாவது, இதிலே சள்ளை இல்லை, தொல்லை இல்லை. தைவிடவும் ஒன்று: இதை தயாரித்தவர்கள் லக்மே! இதே க்மேயிடம்தான், அழகு மற்றும் சருமப் பராமரிப்பிற்காக ண்கள் முழு நம்பிக்கை வைத்துள்ளனர்.

வாருங்கள் நீங்களும் ஸாஃப்ட் அன்ட் பெருகி ரும் கூட்டத்திலே சேருங்கள்.

பட்டுப்போன்ற மென்மையை ங்கமெங்கும் அளியுங்கள்.




**லக்மே**

# அவன் வருவான்...

பெரிய பண்ணையின் வீட்டில் சினிமா ஷூட்டிங் நடக்கிறதாம். கிராமமே கடந்த ஒரு வாரமாய்க் காலையிலும் மாலையிலும் அங்கேயே தவம் கிடந்தது.

செண்பகத்திற்கும் போய்ப் பார்க்க வேண்டுமென்ற ஆசைதான். கைக் குழந்தையையும் அவளையும் தவிக்க விட்டுவிட்டு இன்னொருத்தியுடன் புருஷன் ஓடிப் போன இந்த ஒரு வருஷ இடைவெளிக்குப் பிறகு இப்பொழுதுதான் அவள் யதார்த்த உலகை எதிர்நோக்க ஆரம்பித்திருக்கிறாள்.

யப்பப்பா...! எத்தனை பயங்கரமானது இது! உதவி செய்கிறேன் என்ற போர்வையில் அவளை அடைய நினைத்தவர்கள் எத்தனை பேர்...

அவளின் வேதனை தாளாமல் அவள் அப்பா அடிக்கடி குடிப்பதும், வீட்டில் கலவரம் செய்வதும் அவள் காதுக்கு எட்டி, இப்போது தாய் வீடும் கனவாய்ப் போனது...

உடலில் வலு இருக்கிற வரை நாலு வீடுகளில் போய் வேலை செய்து வயிற்றைக் கழுவ முடியும்...

இதற்கு நடுவே எங்கே போய் ஷூட்டிங் பார்க்க...

கல்யாணமான புதிதில் ஆசை ஆசையாய் வாரத்துக்கு இரண்டு படங்கள் பார்த்ததெல்லாம் போன பிறவியில் என்கிற மாதிரி ஆகிவிட்டது.

மகராசன்! குழந்தை முகத்துக்காகவாவது குடும்பத்தோடு இருந்திருக்கலாம்...

செண்பகம் மகனை மீண்டும் ஒருமுறை முத்தமிட்டாள்.

''இன்னிக்கு ஷூட்டிங் பார்க்கப் போவோமா ராஜா?'' என்று அவனைக் கொஞ்சிக் கொண்டிருந்த போதே...

''செண்பகம்... செண்பகம்...'' என்று அலறிக் கொண்டு உள்ளே நுழைந்தான் கதிரேசன். அவள் புருஷனுக்குத் தம்பி முறை. எல்லோருக்கும் உதவுகிற சுபாவம் அவன் உடம்புடன் பிறந்தது.

''என்ன கதிரேசா...?''

''வந்து... உன் மகன் இருக்கான் இல்லே...''

''ஆமாம் அதுக்கென்ன...?''

''இல்லே... ஷூட்டிங்குக்கு ஒரு குழந்தை வேணுமாம். ரெண்டே ரெண்டு நாட்கள் எடுக்கறதுக்கு! பார்க்க அழகா இருக்கணுமாம். இருநூறு ரூபாய் கொடுப்பாங்களாம்...''

''எத்தனை ரூபாய்...?''

''இருநூறு — ரெண்டு நூறு ரூபாய்த் தாணு...''

''ரெண்டு நாளு படம் பிடிக்கவா?''

''ஆமாம். சினிமாக்காரங்கன்னு சும்மாவா! லட்சம் லட்சமால்ல தருவாங்க. உம் மகன் மட்டும் இதுல தலையைக் காட்டி இந்தப் படம் ஓடிறட்டும். அப்புறம் உன்னையக் கையில பிடிக்க முடியாது. இங்கே மாசம் முழுக்கக் கூலி வேலை செஞ்சாக் கூட இருநூறைப் பார்க்க முடியாது. அதான் அவங்க குழந்தை வேணும்னதும் உன் ஞாபகம் வந்து... ஓடியாந்தேன்...'' என்றான். வேகமாகப் பேசியதில் அவனுக்கு மூச்சு இரைத்தது.

குழந்தையை அவசரமாக அள்ளி எடுத்துக் கொண்டாள். குடிசையைப் பூட்டிவிட்டு வெளியே வந்தபோது, பக்கத்துக் குடும்பங்கள் ஏற்கெனவே போயிருப்பது புரிந்தது.




''கடவுளே... அவங்களுக்கு இதுவரை குழந்தை கிடைக்காமல் இருக்கணுமே...!''

**டை**ரக்டர் தம் உதவியாளர்களைத் திட்டிக் கொண்டிருந்தார்...

''எதுக்குய்யா லாயக்கு நீங்க... ஒரு — வயசுக் குழந்தையைக் கொண்டு வாங்கன்னு முழிக்கிறீங்க. ரெண்டே ரெண்டு நாளைக்குத்தானே, அட்ஜஸ்ட் பண்ணிக்கலாம்னு இங்கே வந்தா நீங்க கையைக் கையைப் பிசையறீங்க...''

செண்பகம் ஷூட்டிங் நடந்து கொண்டிருந்த இடத்துக்கு உள்ளே நுழைந்தாள்.

பெரிய பெரிய ரிஃப்ளக்டர்கள் சூரிய ஒளியைத் திசை மாற்றின. பெரிய பண்ணையின் வீடே மாறிப் போன மாதிரி தோன்றியது.

''இந்தாம்மா இப்படி வர்றியா?''

அவள் டைரக்டர் அருகில் போனாள்.

''உங் குழந்தையைச் சினிமாவில் நடிக்கத் தர்றியா...? ரெண்டே ரெண்டு நாள்

நா. நாகராஜன்

மட்டும்...''

அவர் பணத்தைப் பற்றிச் சொல்லவில்லை. செண்பகத்திற்குத் தயக்கமும் பயமுமாக இருந்தது. பெரிய பெரிய ஆம்பளைகள் சினிமாக்காரர்கள்...

''சும்மா நடிக்கக் குடும்மா. குழந்தை தானே, உன்னையா நடிக்கச் சொல்றாங்க. அதும் யோகம் நல்லாயிருந்தால் சிரிதேவி மாதிரி பெரிய நடிகையா வரட்டும்...'' என்றார் கூட்டத்தில் ஒரு பெரியவர்.

ஒரு துணை நடிகை வந்து குழந்தையை வாங்கிப் போனாள்.

செண்பகம் தென்னை மரத்தின் நிழலில் ஒரு மூலையில் நின்று கொண்டு சினிமா ஷூட்டிங்கை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். 'பிள்ளைக்கு என்ன ஆகுமோ?' என்ற பயம் மட்டும் நெஞ்சில் நெருடிக் கொண்டிருந்தது. டைரக்டரைப் பார்த்தால் கிராமத்து முகமாய்த்தான் இருந்தது.

டைரக்டரின் வார்த்தைக்குக் கட்டுப்பட்டு, காமெரா நகர்ந்தது. விளக்குகள் அணைந்து எரிந்தன.

சூட்டும் கோட்டும் போட்ட கதாநாயகனும் அவன் இளம் மனைவியும் தங்கள் கைக் குழந்தையுடன் வெளியே கிளம்புகிற மாதிரி காட்சி.

கிளம்புகிற நேரத்தில் குழந்தை கதாநாயகனின் கோட்டை அசிங்கம் பண்ணிவிட, அதை அவன் அவள் பக்கம் வீசுகிற மாதிரியும் அவள் குழந்தையைப் பதற்றத்துடன் பிடித்துக் கொள்கிற மாதிரியும் காட்சி.

ஏற்கெனவே அவர்கள் உறவு விரிசலடைந்து இருப்பதை , கதாநாயகனிடம் நாயகிக்கு உள்ள கோபம் நியாயமானது என்பதை இந்தச் செயலின் மூலம் உணர்த்துகிற காட்சி.

டைரக்டர் 'ஸ்டார்ட்' என்று சொல்ல, காமெரா சுழல ஆரம்பித்தது.

குழந்தைக்குப் புதிய உடைகள் போட்டிருந்தார்கள். செண்பகம் ஆசையோடு பார்த்துக் கொண்டிருந்தாள். 'ராசாத்தி. என் கண்ணே பட்டுடும் போல இருக்கு... என்ன அழகு என் பிள்ளை...!'

குழந்தை அசுத்தம் செய்ததை முகபாவனையிலேயே காண்பித்தான் ஹீரோ.

செண்பகத்திற்குச் சிரிப்பாக இருந்தது.

குழந்தையைத் தூக்கிப் போட்டான்...

''யம்மா... என் குழந்தை...'' செண்பகம் பதறினாள். நல்லவேளை அவளை நகர விடாமல் ஒரு துணை நடிகை பிடித்துக் கொண்டாள்.

''சும்மாதாம்மா... அது... பதறாதே...''

செண்பகத்திற்கு வெட்கமாகப் போய் விட்டது. தன்னை யாரேனும் பார்க்கிறார்களா என்று சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டாள். நல்லவேளை எல்லார் கவனமும் படப்பிடிப்பிலேயே இருந்தது.

டைரக்டர் 'கட்' என்று கத்தினார். நடிகையிடம் போனார்: ''முகத்துல எக்ஸ்பிரஷன் காணதும்மா. நான் நடிச்சுக் காட்டறேன். நல்லாப் பார்த்துக்கோ... அதை உன் சொந்தக் குழந்தையாகவே நினைச்சுக்கோ... எப்படிப் பதறுவே...?''

— டைரக்டர் நடித்துக் காட்டினார்.

கூட்டம் கைதட்டி ஆரவாரம் செய்தது.

அழுகின்ற குழந்தையை எடுத்து ஒரு பெண் பிஸ்கட் கொடுத்தாள்...

குழந்தைக்குப் பால் கொடுக்காதது நினைவுக்கு வந்தது.

'சே... என்ன புத்தி கெட்ட பொம்பளை நான்...? புள்ளையோட வயத்தைக் கூடக் கவனிக்கலையே...'

மறுபடியும்டைரக்டரின் 'ஸ்டார்ட்' —

குழந்தை தூக்கிப் போடப்பட்டது.

நடிகை ஏதோ பர்ஸைத் தொலைத்தவள் மாதிரி லேசாக அழுதாள்...

டைரக்டர் 'கட்' என்றார். கொஞ்சம் கோபமானார்.

''என்னம்மா இது... மூடு இல்லையா?''

''என்ன இருந்தாலும் அந்தக்கால பத்மினி விஜயா, மாதிரி வருமா...? என்ன ஆக்ஷன் கொடுப்பாங்க!'' என்றார் கூட்டத்திலிருந்த ஒரு நடுத்தர வயதுக்காரர்.

மதிய இடைவேளைக்காக ஷூட்டிங் தடைப்பட்டது.

அவரவர்கள் அவசரமாக வீட்டின் பின் பக்கம் போய் உட்கார்ந்து சாப்பிட்டார்கள்.

இங்கே இவளும் இவள் மகளும் தென்னை மரத்துக்கடியில் பசியோடு காத்திருப்பது யாருக்கும் கண்ணில் படவில்லை!

செண்பகத்திற்கு எரிச்சலாகிவிட்டது. 'என்ன எடுக்கறாங்க படம்? இப்படியுமா இருப்பா ஒரு நடிகை...? அழத் தெரியாம...

அதுசரி. அவள் எங்கே கஷ்டப்பட்டிருக்கப் போறா? பார்த்தால் வசதியான பொம்பளை மாதிரிதான் தெரியறா...'

குழந்தையின் பசியை ஆற்றியதும் அவளுக்கும் பசி வயிற்றைக் கிள்ளியது.

அவர்களிடம் போய்க் கேட்பதற்கும் மனம் வரவில்லை.

மதியத்திற்குப் பிறகு அவரவர்கள் ரொம்பச் சுறுசுறுப்பாகச் செயல்பட்டனர்.

ஹீரோ மூன்றாவது முறையாகத் தூக்கிப் போட்ட போது குழந்தை நேராக விழாமல் பின்பக்கமாக விழுந்து சரிந்தது. மண்டை தரையில் பட்டது இவளுக்குக் கேட்டது.

அந்தத் தடவை நடிகை சரியாக நடித்துக் கொண்டிருந்தாள்.

''யம்மா என் பிள்ளை...'' என்று கத்திக் கொண்டு செண்பகம் உள்ளே நுழைந்தாள்.

இரண்டு பேர் அவளை அழுத்திப் பிடித்துக் கொண்டார்கள்.

**ஷூ**ட்டிங் முடிந்ததும் அவளிடம் குழந்தையையும் நூறு ரூபாயையும் கொண்டு வந்து கொடுத்தார்கள்.

அந்த நோட்டு அவளுக்கு ஆச்சரியத்தையோ அதீத சந்தோஷத்தையோ தர

# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ

உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமண, திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

உயர் வட்ட ரசிகர்களுக்கு
உயர் வளமுள்ள தேயிலை




## சக்கரா டீ



பாட்டா டீ லிமிடெட்
உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.

daCunha/TT/246/87/TM

# ஜோக் எழுதுங்கள்! பரிசு ரூ. 200/-



அதென்னவோ தெரியவில்லை; வர வரக் கல்லூரி, பள்ளிக்கூட ஜோக்குகள் ரொம்பக் குறைந்து கொண்டே போகின்றன. கல்லூரி ஆசிரியர்கள் வேலை நிறுத்தம் செய்தாலும் ஜோக் ஸ்டிரைக் நடக்க விடலாமா? எனவே, கீழே வெற்றிடத்தில் உங்கள் விலாசத்துக்கு மேலே "ஆசிரியர் — மாணவர் ஜோக்" என்று எழுதி உறை மீதும் அவ்வாறே குறிப்பிட்டு இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங்கள். உங்களுடைய ஒரிஜினல் ஜோக்காக இருக்கட்டும் — ப்ளீஸ்! பிரசுரமாகும் ஜோக்குகளுக்குப் பரிசுத் தொகை சமமாகப் பகிர்ந்து அளிக்கப்படும்.

**முடிவு தேதி: 23.9.87**

என் பெயர்: ...............

விலாசம்: ...............

...............

வில்லை.

'சினிமாக்காரங்களுக்கு எல்லாமே அலட்சியம்தான் போல... புள்ளையோட அருமையும் தெரியலே... பணத்தோட அருமையும் தெரியலே...'

அவளுக்குத் தன் புருஷனின் ஞாபகம் வந்தது.

'ம்... இந்நேரத்துக்கெல்லாம் அவருக்குப் புள்ளை ஞாபகம் இருக்குதோ இல்லையோ... இந்தப் புள்ளையைப் படத்தில பார்த்துட்டாவது வரமாட்டாராங்கற ஆசையிலதானே இந்தக் குழந்தையை இத்தனை கஷ்டப்பட்டு நடிக்க வைக்கறேன்...' — என்று நினைத்து, தன் நினைவில் உருகிக் குழந்தையை ஒரு முறை முத்தமிட்டாள்.

அன்றைக்கு இரவு கிராமத்துக்காரர்கள் நிறைய பேர் வந்து குழந்தையைக் கொஞ்சி விட்டுப் போனார்கள்.

பின் மண்டையில் லேசாக ரத்தம் கசிந்ததை மறுநாள் கம்பவுண்டரிடம் காட்ட வேண்டும் என்று நினைத்துக் கொண்டாள் செண்பகம்.

அதற்கு நேரமில்லாமல் 'ஷூட்டிங்... ஷூட்டிங்' என்று வீட்டிற்கு வந்து குழந்தையை வாங்கிப் போய் விட்டார்கள்.

இவள் போன போது நேற்றைப் போலவே குழந்தையை வைத்து வேறு சில காட்சிகள் எடுத்துக் கொண்டிருந்தார்கள்...

கணவன் மனைவி சண்டையைக் குழந்தையின் கஷ்டத்தின் மூலம் தாய்மார்களுக்குப் புரிய வைத்துக் கொண்டிருந்தார் அந்தப் பிரபல டைரக்டர்.

ஷூட்டிங் முடிந்து குழந்தையைத் தந்த போது, அதன் உடல் லேசாகச் சுடுவது போலிருந்தது அவளுக்கு.

குழந்தையின் தலையில் சின்னதாகப் பிளாஸ்திரி ஒட்டியிருந்தார்கள்.

தாயாக நடித்த அந்தப் பிரபல நடிகை, ஷாட் ஓ. கே. யான திருப்தியில் தன் மேக்—அப்பைக் கலைத்துக் கொண்டிருந்தாள்.

செண்பகம் குழந்தையுடன் வீடு திரும்பிய போது —

அவளுக்கு நிறையவே நம்பிக்கை இருந்தது —

'எப்படியும் என் புருஷன் வந்துடுவாரு.

ரெண்டு நாள் ஷூட்டிங்குக்கே என்னால் பிள்ளையைப் பிரிஞ்சு இருக்க முடியலே... அவரால் எப்படி ரொம்ப நாளு இருக்க முடியும்...?

சினிமாக்காரங்க வந்ததும் நல்லதுக்குத்தான் —'

என்றெல்லாம் அப்பாவித்தனமாக நினைத்துக் கொண்டிருந்தாள் அவள்.

அன்றைக்கு இரவில், கனவில் அவள் புருஷன் வந்தான் —

கோட்டு சூட்டுடன் —

அவள் பாதித் தூக்கத்தில் திடுக்கிட்டுக் கண் விழித்தாள் —

பக்கத்தில் குழந்தை அமைதியாகத் தூங்கிக் கொண்டிருந்தது.

## மென்று குதப்பும் வெற்றிலை-புகையிலை மென்றிட மென்றிட... உங்களையே தின்றிடுமே.

வெற்றிலை, பாக்கு மசாலா, சுண்ணாம்பு, புகையிலை-உஷார்! உள்ளிருப்பதோ கடு ரசாயனங்கள்--அவை மெல்லிய வாய், தொண்டைச் சதைகளை எரித்துத் தின்றுவிடும்... குதப்பக் குதப்ப ஆபத்து: வாயில், தொண்டையில் (கான்ஸர்) புற்று நோய்க்கு 'வெற்றிலை-பாக்கு' வரவேற்பு தான். பரம சாதுவான வெண் திட்டுக்களாகத் தான் துவங்கும், வந்தது கூட உங்களுக்குத் தெரிவதில்லை. அசட்டை செய்யாதீர். உடனே பாருங்கள் உங்கள் டாக்டரை, பல் மருத்துவரை.

கூர்முனை வக்கிரப் பற்களும், பொருந்தாத அடைப்புகளும், பொய்ப்பற்களும் கூட கான்ஸர் வரக் காரணம்.

**ஆலோசனைக்கு அணுகவேண்டிய இதர நிலையங்கள் :**

- பாலிகா மெடிகல் செண்ட்டர், 48, பபர் ரோடு, பெங்காலி மார்க்கெட், நியூ டெல்லி 1100 01. போன் : 389363
- 15/A, சரத் போஸ் ரோடு, கல்கத்தா 700 020. போன் : 433812
- 127, அங்கப்ப தெரு, சென்னை 600 001. போன் : 39444

ஆயினும், நெஞ்சம் தளராதீர். முளையிலேயே நோயறிந்து விட்டால் முன்னதாகவே முழு குணம் பெறமுடியும்.

ஆண்டுக்கு ஒரு முறையாவது நீங்கள் புற்று நோய்ப் பரிசோதனை பெறவேண்டியது அதி முக்கியம். இந்தியன் கான்ஸர் ஸொஸைட்டி நோயறி நிலையத்திற்குச் செல்லுங்கள். அல்லது உங்கள் டாக்டரிடம் யோசனை பெறுங்கள்.

நீங்கள் புகையிலை, வெற்றிலை போடுபவரானால், தினமும் படுக்கப் போகுமுன் கொப்பளித்து வாய்முழுதும் துப்புரவு செய்திடத் தேவை. முறை தவறாமல் பல் டாக்டரைப் பார்த்து வாருங்கள். வெற்றிலை-புகையிலைப் பழக்கத்துக்கு முற்றுப் புள்ளி போட முயலுங்கள். இப்போதே.

### இதோ கான்ஸர் புற்று நோய் இன்ஷ்யூரன்ஸ்!

இந்தியன் கான்ஸர் ஸொஸைட்டி வழங்குகிறது: புற்று நோயை முன்னறிந்து, குணப்படுத்துவதற்கான எல்லாச் செலவுகளுக்கும் ஈடு தரும் இன்ஷ்யூரன்ஸ்-இந்தியாவிலே இது ஒன்றுதான். சிறியதொரு தொகை கட்டி ரூ. 40,000 வரை காப்புறுதி பெறலாம் உங்கள் துணைவியாரும் நீங்களும். மேலும் விவரமறிய போன் மூலமோ, எழுதியோ கேளுங்கள் எங்களை.



**இந்தியன் கான்ஸர் ஸொஸைட்டி**

தேசியத் தலைமையகம் : லேடி ரத்தன் டாட்டா மெடிகல் & ரிசர்ச் சென்டர், எம். கார்வே ரோடு, கூப்பரேஜ், பம்பாய் 400 021. போன் : 2021417

முன்னமே நோயறிவீர்
முன்னமே குணம்பெறுவீர்.

daCunha/ICS/15/87/TAM/R

# நிற்க நிழல் வேண்டும்!

## 7

கதவு பலமாகத் தட்டப்படும் ஓசை கேட்டு ஜயசீலன் திடுக்கிட்டு விழித்துக் கொண்டான். எங்கும் கும்மிருட்டு. இந்த நடு நிசியில் யார் தட்டுவது. தட்டலில் ஓர் அவசரம் தொனித்தது. தேவநேசனாக இருக்குமோ?

அவன் விருக்கென்று எழுந்தான். நடையில் இருந்த விளக்கைப் போட்டபடி அப்பா நின்றார்.

"நீ இரு இங்கேயே!" என்று கீழ்க்குரலில் அதட்டல் போட்டார்.

அதற்குள் பட படவென்று மீண்டும் கதவு தட்டப்பட்டது.

அப்பா பதற்றத்துடன் கதவைத் திறந்தார். கதவிடுக்கின் வழியாக, தெரு விளக்கின் ஒளியில் நாலைந்து போலீஸ் தலைகள் நிழலுருவமாகத் தெரிந்தன.

சிங்களத்தில் அவர்கள் ஏதோ கேட்டார்கள். அப்பா இல்லையென்று தலையசைத்தார்..அவரை இடித்துத் தள்ளிக் கொண்டு அவர்கள் திமு திமுவென்று உள்ளே நுழைந்தார்கள். ஒவ்வொரு அறையாக விளக்கை ஏற்றிப் பார்த்தார்கள். ஜயசீலனைக் கண்டதும் அவனுடைய கழுத்தை நெக்கி,

"உன் பெயரென்ன?" என்று அதட்டினார்கள்.

அவனுக்கு நா உலர்ந்து போயிற்று. "ஜயசீலன்" என்றான் மெல்லிய குரலில்.

"உன் அண்ணன் எங்கே?"

"தெரியாது!"

பளாரென்று அவன் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது. ஒரு விநாடி பொறி கலங்கிப் போயிற்று.

"உம் மகனை எங்கே பதுக்கி வெச்சிருக்கே?"

"என் மகன் வீட்டிற்கு வந்து நான்கு நாட்கள் ஆகிறது ஐயா! எங்கிருக்கான் என்று தெரியாது!"

"அப்ப இதை வாங்கிக்கோ."

"அம்மாடி!"

அவன் காணச் சகிக்காமல் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

கிட்டத்தட்ட இருபது நிமிஷ அமளிக்குப் பின் அவர்கள் அகன்றதும் புயல் ஓய்ந்தது போல் இருந்தது.

அம்மா அப்பாவின் அருகில் அமர்ந்து ஏதோ புலம்பியபடியே அழ ஆரம்பித்தாள். அவன் பேசாமல் தன் அறைக்குச் சென்று படுத்துக் கொண்டான். கன்னம் இன்னும் சுரீரென்று வலித்தது. அடிவயிற்றிலிருந்து சுருண்டெழுந்த அவமானம் கண்களில் நீராய் முட்டிற்று.

அண்ணனைத் தேடுகிறார்கள்.

ஜஸ்டின் சொன்ன விஷயத்துக்கும் இதற்கும் ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டும். நிச்சயம் ஏதோ நடந்திருக்க வேண்டும்.

அவனுக்கு இதயம் வெகு வேகமாக அடித்துக் கொண்டது. போட்ட திட்டத்தைத் தேவாவும் அவனது தோழர்களும் நிறைவேற்றியிருப்பார்களோ? பிறகு பதுங்கியிருப்பார்களோ?

அப்படித்தான் நடந்திருக்க வேண்டும். இந்தப் போலீஸ் விஷயத்துக்கு அதுதான் காரணம். விவரம் முழுவதுமாகப் பிரக்ஞையைத் தாக்கியதும் அவன் வெலவெலத்துப் போனான்.

அண்ணன் பிடிபட்டுப் போனால் என்ன ஆகும்?

நினைத்துப் பார்க்கவே அவனுக்குக் கதி



கலங்கிற்று.

தேவாவுக்குத் தெரியும், தனக்கு என்ன நேரும் என்று. சாவுக்குத் துணிந்தே அப்படிப் போயிருக்கிறான். எத்தனை பெரிய விஷயம் அது!

சற்று முன்னால் போலீஸ்காரன் கழுத்தை நெக்கியதும் தன்னுள் ஏற்பட்ட பீதியை நினைத்துப் பார்த்தான். அவமானமும் கோபமும் சேர்ந்து எழுந்தன.

நாலாவது . பொடியன். அப்பாவை எப்படி அடித்தார்கள்!

இவர்கள் எல்லாம் நம்மை என்னவென்று நினைத்து விட்டார்கள்?

'பொறுமை வேணும் தம்பி' என்கிறார் ர்ர்சமாணிக்கம் மாமா.

அவன் பெரியவர்கள் சொல்லக் கேட்டிருக்கிறான். முன்பு பொறுமையாகக் கொழும்பு கச்சேரியின் முன் அரசுக் கொள்கைகளையும் சாஸனத்தையும் எரித்துச் சத்தியாக்கிரகம் செய்தபோதும் சிங்களப் போலீஸ் ஈவிரக்கமில்லாமல் தடியடிப் பிரயோகம் செய்ததாம். முறையாகச் செய்த ஒப்பந்தங்கள் எதையும் அரசு நிறைவேற்றவில்லையாம். அதோடு அப்பாவி ஜனங்களின் மீது காட்டும் மூர்க்கத்தனம்...

இதற்கெல்லாம் எப்படிப் பொறுமையாக இருப்பது?

இரவு தூங்காமலே கழிந்தது. மறுநாள் விடிந்ததுமே ஜஸ்டினின் அப்பா செல்வநாயகம் தினசரித் தாளைத் தூக்கிக் கொண்டு வந்தார்.

''பார்த்தீரா குகதாசன். நா நினைச்சேன். இப்படியெல்லாம் எதிர்ப்பு ஆரம்பிக்கும் எண்டு...''

அப்பாவின் முகம் பேயறைந்ததைப் போல் ஆயிற்று.

''என்ன விஷயம்?''

''போலீஸ் அதிகாரி சந்திரசேகரனைச் சில பொடியன்கள் கொலை செய்ய முயன்றதாகவும் பிறகு தலைமறைவாகிப் போனதாகவும் செய்தி வந்திருக்கு. பொடியன்களைப் போலீஸ் தேடுகிறதாம்!''

அப்பா பதிலே சொல்லவில்லை. செல்வநாயகத்தின் கையிலிருந்த தாளைப் பிடுங்கிக் கொண்டு அதற்குள் முகத்தை மறைத்துக் கொண்டார். சற்றுப் பொறுத்துத் தாளை மடித்துக் கொடுத்து முகத்தைத் துண்டால் துடைத்துக் கொண்டார்.

நேற்று இங்கு போலீஸ் வந்த விவரம் தெரிந்தே ஜஸ்டினின் அப்பா வந்திருக்க வேண்டும் என்று ஜயசீலன் நினைத்துக் கொண்டான்.

''தேவநேசன் வீட்டிலே இருக்கானா?''

''இல்லையே. ஒரு கிழமையாச்சு போய். எனக்கு அவனைப் பற்றிக் கவலைப்படக் கூட சக்தி இல்லாம போய்விட்டது செல்வநாயகம்!''

செல்வநாயகம் தலையைக் குனிந்து கொண்டு பெருமூச்சு விட்டார்.

''நிலைமை ரொம்ப சீர்கெட்டுப் போய்க் கொண்டிருக்கு குகதாசன். பொடியன்களை இனி கட்டுப்படுத்துவது கஷ்டம்.''

''என்ன சீர்கெட்டுப் போனாலும் வன்முறைக்குத் துணியலாமா செல்வநாயகம்?''

''ஒரு மூலைக்கு விரட்டப்பட்ட நிலையிலே அப்படிப்பட்ட துணிச்சல்தான் வரும் குகதாசன். அரசு வன்முறையால் அடக்கப் பார்த்தால் வன்முறையால்தான் எதிர்ப்புக் கிளம்பும். சரியோ, நப்போ, இது தவிர்க்க முடியாத விளைவாப் போயிட்டது. நீயும் நானும் இப்பக் கையாலாகாதவர்கள். உன் மகனோ என் மகனோ கேட்கிற கேள்விக்கு நம்மால் பதில் சொல்ல முடியுமா? அரசாங்கத்துடைய தரப்படுத்துதல் முறையிலே தேவநேசனுக்குக் கல்லூரியிலே இடம் கிடைக்கல்லே. எதிர்காலமே அவனுக்குப் போச்சு. உன்னாலே ஏதாவது செய்ய முடிஞ்சுதா? நாளைக்கு ஜஸ்டினுக்கும் இதே பிரச்னை தான் வரும்.''

அப்பா பதிலே சொல்லவில்லை. தனக்கு இதெல்லாம் சம்மதமில்லை என்பது போல் தலையைக் குறுக்காக ஆட்டிக் கொண்டிருந்தார். நேற்று இரவு போலீஸ் வந்து சோதனை செய்ததை வாயைத் திறந்து சொல்லவில்லை. அவர்களிடம் அடிபட்டது மட்டும் அவமானமில்லை. தேவநேசனுடைய போக்கும் அவருக்கு அவமானம் என்று ஜயசீலன் நினைத்துக் கொண்டான். ஜஸ்டினுடைய அப்பாவின் வாதம் நியாயமானதாகப் பட்டது. அப்பா ஒரு பயங்கொள்ளி என்று தோன்றிற்று.



வாஸந்தி



**இவர்:** பத்திரிகைகளுக்கு அனுப்பற கதைகளை படிச்சுப் பார்க்காமலே திருப்பி அனுப்பறாங்கன்னு எப்படி இவ்வளவு உறுதியாச் சொல்றீங்க?

**அவர்:** திரும்பி வந்த கதைகளைப் படிச்சுப் பார்க்கவாமின்னு என்னோட எழுத்து எனக்கே புரியலையே!

— பூ. பெருமாள்சாமி

அன்று மாலை ஜஸ்டின் அவனை 'கடற்கரைச் சாலைப் பக்கம் நடப்போம் வா!' என்று அழைத்துக் கொண்டு போனான். கூட சீலியாவும் இருந்தது காரணம் புரியாத உற்சாகத்தை அளித்தது.

இரண்டுவயதே அவர்களை விடப்பெரியவனாக இருந்தும் அவர்களை விட அதிக உலக ஞானம் உடையவன் என்கிற கணிப்பில் ஜஸ்டின் சற்று மெதப்பான பாவனையில் இருந்தான்.

''சிவகுமாரன் என்ற ஆளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா?'' என்றான்.

''ஊஹூம்'' என்று ஜயசீலன் உதட்டைப் பிதுக்கினான்.

''சிவகுமாரனைத் தெரியாத ஒரு தமிழ்ப் பொடியன் இருக்க முடியுமா?''

ஜயசீலனுக்கு அவமானமாக இருந்தது. தேவநேசன் தன்னை இன்னமும் சிறு பிள்ளையாகப் பாவித்து எதுவுமே தெரிவிக்காமல் இருப்பதை நினைத்துக் கோபம் வந்தது.

''இரண்டு வருஷம் கழிச்சு எங்களுக்கும் நிறைய தெரிய வரும். இப்ப நீ விஷயத்துக்கு வா!'' என்று சீலியா முணுமுணுத்தாள்.

''மாணவர் இயக்கத்துக்கு இந்த சிவகுமாரன்தான் தலைவர். ஆயுதம் ஏந்தித்தான் இனிமேல் போராடணும், வேறு வழியில்லே என்ற தீர்மானத்துக்கு வந்தவர். நேற்று ரொம்பப் பெரிய விஷயம் நடந்து போச்சு.''

''என்ன?'' என்றான் ஜயசீலன் ஜாக்கிரதையாக.

''அன்டைக்கு நான் சொல்ல இல்லே, சந்திரசேகராவையும் துரையப்பாவையும் தீர்த்துக் கட்ட முடிவு செய்திருக்கான்கள் என்று! இரண்டு நாட்கள் முன்னாலே தெல்லிப் பழைக்கு சந்திரசேகரா போயிருக்கார் என்று அறிஞ்சு அங்கே போய் குண்டு வீசியிருக்கான். ஆனால் சந்திரசேகரா தப்பிச்சு யாழ்ப்பாணத்துக்கு வந்துட்டாராம். நேத்து அவர் வேலைக்குப் போகும் சமயம் ஜீப்பை மறிச்சு, குண்டு எறிஞ்சிருக்கான். குண்டு வெடிக்கல்லே. சுழல் துவக்கை எடுத்துச் சுடப் பார்த்திருக்கான். அதுவும் வெடிக்கல்லே. உடனே தப்பி ஓடிட்டானாம். இங்கேதான் யாழ்ப்பாணத்திலே அவன் ஒளிஞ்சிருக்கான் என்டு போலீஸ் அவன் தலைக்கு விலைபோட்டுத் தேடுகிறதாம். ஆயிரம் போலீஸ் ஆயுதத்தோடு வந்திருக்காம்.''

''ஐயய்யோ!'' என்றான் ஜயசீலன் பீதியுடன். ''அப்ப அவனும் அவனுடைய சகாக்களும் எப்படித் தப்பிப்பான்கள்?''

''கஷ்டம்தான்'' என்று ஜஸ்டின் ஒப்புக்கொண்டான். ''ஆனால் ஒன்று மட்டும் உறுதி. பிடிபட்டாலும் எதிரி கையால் சாக மாட்டான்.''

''எப்படி?''

''அவனன்டை எப்பவும் குப்பியிலே 'சயனைட்' விஷம் இருக்கும். பிடிபட்டால் நஞ்சை வாயில் ஊற்றி விழுங்கி விடுவான்கள்.''

''ஐயய்யோ!''

ஜயசீலனுக்கு நா உலர்ந்து போயிற்று. தேவநேசன் சயனைடை வாயில் ஊற்றிக் கொள்வது போல் தோன்றிற்று. கையும் காலும் வெலவெலத்துப் போயின.

''என்ன ஜஸ்டின் நீ!'' என்று அண்ணனை அதட்டியபடி சீலியா ஜயசீலனின் கையைப் பிடித்துக் கொண்டாள்.

''ஏன் இப்படி இவனைப் பயப்படுத்தறே?''

''இதிலே பயப்பட என்ன இருக்கு?'' என்றான் ஜஸ்டின் அலட்சியமாக. ''விளைவைப் பத்திப் பயப்படாதவன்தான் புரட்சிக்குத் துணிவான்! புரட்சிக்காரனுக்குத் தன்மானமும் அதிகம்!''

''இந்தப் புரட்சியும் கிரட்சியும் ஜயசீலனுக்கு வேண்டாம். தேவா ஒருத்தன் போதும் அவன் வீட்டுக்கு'', என்றாள் சீலியா கண்டிப்பாக.

''அஹ்! இவ பெரிய மனுஷி!'' என்று ஜஸ்டின் சிரித்தான். ''உங்க ரெண்டு பேருக்கும் நாட்டு நடப்பு ஒண்ணும் தெரியல்லே. இதிலிருந்தெல்லாம் இனி நாம் ஒதுங்கியிருக்க முடியாது. பெரியவர்கள் அப்படி இருந்ததால்தான் எதுவும் உருப்படியா நடக்கல்லே. பெண்கள் அணியில் நீ கூடச் சேர வேண்டி வரும் சீலியா!''

''அம்மாடி, சீலியா எதிலேயும் சேர வேண்டாம்!'' என்றான் ஜயசீலன் அவசரத்துடன்.

''நீங்க மட்டும் தனியான ஒரு உலகத்திலே இருங்கள்!''

''இருக்கோம், உனக்கென்ன?'' என்று சீலியா சிரித்து ஜயசீலனின் கையை அழுத்தினாள்.

அந்த அழுந்தலில் ஒரு புதிய நெருக்கம் தெரிந்தது. மீண்டும் ஒரு நூதன உணர்வு அவனுள் ஏற்பட்டது. அடுத்த இரண்டு நாட்களுக்கு அந்த உணர்வும் அது தந்த சுகமும் தாக்குப் பிடித்தன.

மூன்றாம் நாள் மீண்டும் நள்ளிரவுக்கு மேல் கதவு தட்டப்பட்டது. தட்டலில் தயக்கம் தொனித்தது. ஓசை கேட்கும் முன்பே அவன் உள்ளுணர்வின் உந்துதலில் விருட்டென்று எழுந்து கொண்டான். கூடத்து விளக்கை ஏற்றி அப்பா ஜாக்கிரதையாகக் கதவைத் திறந்தார். சரேலென்று ஓர் இளைஞன் உள்ளே நுழைந்தான்.

''யார் நீ?'' என்றார் அப்பா அதட்டலாக.

**RM.V**

அளிக்கும்

# சத்யா மூவீஸ்

உட்லண்ட்ஸ் A/c
சினிமாஸ்கோப்

கமலா A/c
தினசரி 4 காட்சிகள்

அபிராமி A/c

ஸ்ரீ கிருஷ்ண
தினசரி 3 காட்சிகள்

ஸ்ரீ பிருந்தா A/c
பகல் காட்சி

மற்றும் தமிழகமெங்கும்

# ஊர்க்காவலன் A

மனோபாலா

சங்கர்-கணேஷ்

A.L. நாராயணன்
B.S. லோகநாதன்
K.R. கிருஷ்ணன்



G.தியாகராஜன் . V.தமிழழகன்

ELEGANT



கணவன்: ராப்பிச்சை ராக்கப்பனுக்கு நீ ரொம்பக் கரிசனம் காட்டாதேன்னு படிக்கப் படிக்கச் சொன்னேனே கேட்டியா?

மனைவி: அதுக்கு என்ன இப்போ?

கணவன்: அவனுக்கு இன்னிக்கு ஓய்வு நாளாம்! அதனால தேரியர்லே சாப்பாடு கொடுத்தனுப்பச் சொல்லி ஆளனுப்பியிருக்கான்!

— ஆர். அரிகோபி.

அமைச்சர்: அரசே! மூன்று மாதங்களாகப் போர் புரிந்தும் வெற்றி தோல்வி தெரியவில்லை என்பதால் எதிரி ஓலை அனுப்பியுள்ளார்!

மன்னர்: என்னவென்று?

அமைச்சர்: 'டாஸ்' போட்டுப் பார்க்கலாம்' என்று!

— ஆர். அரிகோபி.



"உன் கணவர் இந்த மாதச் சம்பளப் பணத்தில் பாதியைச் சூதாட்டத்தில் பறிகொடுத்துட்டார்ன்னு சந்தோஷமாச் சொல்றியே!"

"ஆமாண்டி, அவர் எப்பவும் முழு சம்பளத்தையுமே சூதாடித் தொலைக்கிறவராச்சே!"

— மணியன் தர்மலிங்கம்

திறந்த கதவின் இடைவெளிக்குப் பின்னுல் வேறு யாராவது இருக்கிறூர்களா என்று நோட்டம் விட்டார்.

இளைஞனின் முகத்தில் சோர்வும் அவசரமும் தெரிந்தன. சாப்பிட்டு இரண்டு நாள் ஆகியிருக்க வேண்டும். கண்களில் மட்டும் ஒரு பளபளப்புத் தெரிந்தது—ஜுர வேகம் போல்.

"என் பெயர் சிவகுமாரன். தேவநேசனுடைய நண்பன்" என்றான் அவன் மெல்லிய குரலில்.

"தேவநேசனுக்கு என்ன ஆச்சு?" என்றார் அப்பா பரபரப்புடன்.

"அவனுக்கு ஒன்றும் ஆகஇல்லே. பத்திரமா இருக்கான். எங்களுக்குப் பணம் தேவைப்படுகிறது. நீங்கள் கொஞ்சம் கொடுத்து உதவ வேணும்."

அப்பா சட்டென்று விறைத்துக் கொண்டார்.

"உங்கள் நாச வேலைக்கு என்னுல் உதவ முடியாது. பணம் இல்லே. நீ போ இங்கிருந்து." என்றார் கடுமையாக.

ஐயா, இது நாச வேலை இல்ல. தமிழனுடைய தன்மானப் பிரச்னே.

"இந்த வாதமெல்லாம் நான் கேட்டுக் கொள்ளத் தயாராயில்லே. என்னுல் உதவ முடியாது. நீ போ. நீ இங்கே இருக்க இருக்க எங்களுக்கு ஆபத்து. தேவநேசன் உனக்குத் தெரிஞ்சவன் என்ற காரணத்தாலே ஏற்கெனவே இந்த வீட்டைப் போலீஸ் கண்ணி வெச்சிருக்கு. போய் விடு!"

அப்பா கிட்டத்தட்ட அவனுடைய கழுத்தைப் பிடித்து வெளியேற்றிக் கதவைச் சாத்தினுர்.

ஜயசீலன் மூலையில் நிற்பதைப் பார்த்து, "உனக்கென்னடா இங்கே வேலை? போய்ப் படுடா!" என்று அதட்டல் போட்டு உடனடியாக விளக்கை அணைத்தார்.

அம்மாவும், தங்கைகளும் உள்ளறையில் அயர்ந்த தூக்கத்தில் இருந்தார்கள்.

ஜஸ்டினின் கூற்றுப்படி இன்றைக்கு தமிழ் பொடியன்களுக்கெல்லாம் கதாநாயகனுக விளங்கும் சிவகுமாரனை நேருக்கு நேர் பார்த்ததில் ஜயசீலனின் மேனியில் ஒரு சிலிர்ப் போடிற்று. அப்பா அவனை ரொம்பவும் கடுமையாக நடத்தி விட்டதாகக் கோபம் வந்தது.

ஒரு பொடியன் — தேவநேசனின் வயது தான் இருக்கும் அவனுக்கு — தன் உயிரைத் துச்சமாக நினைத்துத் தன் இனத்தாரின் மானத்தைக் காக்க ஒரு வேலையில் இறங்கு கிறுன் என்பது எவ்வளவு பெரிய விஷயம்!

அவனுக்குப் பசியாக வேறு இருந்திருக்கும். சாப்பாட்டிற்காவது பணம் கொடுத் திருக்கலாம். தேவாவும் பட்டினியோடு இருக்கிருனே என்னவோ.

அவன் சட்டென்று கவனம் கலைந்து எழுந்து உட்கார்ந்தான். ஓசைப் படுத்தாமல் எழுந்து நடந்து கவனித்தபோது கூடத்துச் சுவரோரமாக அப்பா அமர்ந்திருந்தார். கைகளுள் முகத்தைப் புதைத்துத் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தார்.

(தொடரும்)

# ராஜேந்திர பிரசாத் ஜனாதிபதி ஆன கதை! 6



• ஜனாதிபதி பதவியில் அதிக நாட்டம்.

**ப**ழைய நண்பர் என்று சொன்னாலும் சரி, பழைய எதிரி என்று கூறினாலும் சரி, பொருத்தமாகவே இருக்கும் — அத்தகைய ஒருவருடன் தமது தென்னாட்டுப் பயணம். ஒன்றின் போது இரண்டு மணி நேரம் செலவிட்டார் ராஜாஜி! அந்த ஒருவர் — வேறு யார்? ஈ. வெ. ரா. பெரியார்தான்!

ஈ. வெ. ரா., ராஜாஜியைச் சந்தித்து அவருடைய ஆலோசனையைப் பெற விரும்பினார். எதுபற்றி? தம்மைவிட நாற்பது வயது சிறியவரான ஒரு பெண்மணியைத் தாம் மணந்து கொள்வதா, வேண்டாமா என்பது பற்றித்தான்!

திருமணம் நடந்தது. இதுவே திராவிடர் கழகம் உடைந்து திராவிடர் முன்னேற்றக் கழகம் உருவாகக் காரணமும் ஆயிற்று. "கல்யாணத்துக்கு ஆதரவு தந்து ஊக்குவித்ததன் மூலம் ஸி. ஆர்.தான் திராவிடர் கழகம் உடையக் காரணமானார்" என்று கூடச் சில திராவிடத் தோழர்கள் ஸி. ஆர். மீது குற்றம் சுமத்தினார்கள்.

ஆனால் உண்மை என்ன? ஃபிலிப் ஸ்ப்ராட், "**D.M.K. in Power**" என்ற தமது நூலில் நுட்பமாக விளக்கியிருக்கிறார்: அரசியல் எவ்வாறானாலும் பெரியாருக்கும் ராஜாஜிக்கும் இருந்த அந்தரங்க நட்பு என்றும் மாறியதில்லை. பெரியாருக்குத் தமது சொந்த வாழ்க்கை சம்பந்தப்பட்ட இந்த விஷயத்தில் ராஜாஜியைத் தவிர வேறு யாரையும் ஆலோசனை கேட்க முடியவில்லை. சிறந்த பண்பாடுகளை உடைய ராஜாஜி, 'எப்போது அம்மையாரின் பெயர் ஈ. வெ. ரா. வுடன் இணைக்கப்பட்டுப் பேச்சுக்கிடமாகி விட்டதோ, இனி யோசிப்பதற்கே இடமில்லை; அவரைக் கல்யாணம் செய்துகொள்ள வேண்டியது பெரியாரின் கடமை' என்று கூறினார்.

ஃபிலிப் ஸ்பிராட்டின் இந்தப் புத்தகம் ஸி. ஆர்., ஈ. வெ. ரா. ஆகிய இருவரும் உயிரோடு இருந்தபோது எழுதப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

**கவர்னர் ஜெனரல் அடிக்கடி சொற்'**

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV**
**ராஜ்மோகன் காந்தி**

பொழிவுகளை நிகழ்த்த வேண்டியிருந்தது: கேட்கவும் வேண்டியிருந்தது. பேச நேர்ந்த போது சில சமயம் அவர் அடிப்படையான சீர்திருத்தம் எதையாவது கூறுவார். அமைச்சர்கள் இதைக் கேட்கவே பிடிக்காமல் நெளிவார்கள். உதாரணமாக பம்பாயில் (8.8.49) பேசும்போது அவர் சொன்னார்:

"எல்லாக் குழந்தைகளுக்கும் கட்டாய ஆரம்பக் கல்வி பற்றி நிறையவே பேசப்படுகிறது. ஆனால் அதற்கான பள்ளிக்கூடங்களும் ஆசிரியர்களும் போதுமான அளவில் நம்மிடம் இன்று இல்லை. எனவே என்னுடைய யோசனை என்னவென்றால், வாரத்தில் மூன்று நாட்கள் குழந்தைகள் பள்ளிக்கூடம் செல்லட்டும். இந்த முறையில், இன்றுள்ளதைப் போல இரு மடங்குப் பிள்ளைகளுக்கு நாம் கல்வி அறிவு புகட்டலாம். பாக்கி நான்கு நாட்களில் குழந்தைகள் தங்கள் பெற்றோருடன் இருந்து பயன்பெற வாய்ப்பளியுங்கள். பெற்றோர்களுக்கு அவர்களுடைய தொழிலில் உதவியாக இருக்கட்டும். கிராமப்புறங்களில் இல்லங்கள், தொழிற் கல்வி கற்றுத் தரும் கூடங்களாகவும் விளங்குகின்றன. பெற்றோர்கள் தொழில் கற்றுத் தரும் ஆசான்களாகவும் விளங்குகிறார்கள்.'

ராஜாஜி, தாம் பேசுவதற்கு முன்னால் மேடையில் உள்ள பிறரது பேச்சுக்களைக் கேட்டே ஆக வேண்டுமல்லவா? அவை பற்றித் தமது கருத்தை ஒளிவு மறைவின்றி வெளியிட்டு, அவசியமானால், கண்டிக்கவும் செய்வார்:

"நீங்கள் எனக்கு அணிவித்த மலர் மாலைகளையும் புகழ் மாலைகளையும் ஒப்பிடும் போது, மலர் மாலைகளே தேவலாம் என்று



• திருமணம் பற்றி அறிவுரை



# சிரிப்பாய்ச் சிரிக்கும் சினிமா!

- ஒருத்தி: "கல்லாப் பெட்டி" சிங்காரத்திற்கு விருப்பமான நடிகை யார்?

  மற்றொருத்தி: "ரூபா."

  — அ. சீதாப்பிரியன், சென்னை — 12.

- "அந்த டிஸ்ட்ரிபியூட்டர் எதற்கு பிலிமை மோந்து... மோந்து பார்க்கறார்?"

  "மண் வாசனை இருக்கான்னு பார்க்கிறாரோ என்னவோ!"

  — ரம்யா, கோவை — 16.

- "'சின்னப்பூவே மெல்லப் பேசு' படத்தோட செகண்ட் பார்ட்டை சினிமாஸ்கோப்ல எடுக்கிறாங்களாம்!"

  "அப்படியா! படத்தோட டைட்டில்?"

  "'பெரியப் பூவே! சத்தமாப் பேசு'!"

  — டி. ஜோசப் டிசௌஸா, திருச்சி — 1.

- "'தங்கமா? தண்ணீரா?' படத்தின் கதை உங்களுடையது என்று கோர்ட்டில் வழக்குப் போட்டீர்களே! என்னாச்சு?"

  "இரண்டு படத்தையும் பார்த்து விட்டு, 'இரண்டிலுமே கதை கிடையாது. அதனால் காப்பி அடிக்கும் பிரச்னையே எழவில்லை' என்று ஜட்ஜ் வழக்கைத் தள்ளுபடி செய்து விட்டார்!"

  — எஸ். பிரியதர்சினி, மதுரை — 1.

- ஒருவர்: பார்லிமெண்டில் எதுக்கு, வருமான வரி கட்டாத சினிமா நடிக, நடிகையர்களின் பெயரை அடிக்கடி அறிவிக்கிறாங்க?

  மற்றவர்: அவங்க கட்சியிலே சேருவதற்குத் தயாராக இருக்கணும்னு

(ரூ. 200/— பரிசு சமமாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது.)

எனக்குத் தோன்றுகிறது. மலர் மாலைகளைக் கழற்றி விட முடியும். புகழ் மாலைகள் என்னைக் கவலையில் ஆழ்த்துகின்றன. முகஸ்துதி இன்னமும் எதற்கு? பிரிட்டிஷ் ஆட்சியிலிருந்து விடுபட்டு, நாம் சுய ஆட்சி ஏற்படுத்திக் கொண்டு விட்டோம். அதிகார வர்க்க ஆட்சியை மாற்றி, ஜனநாயகத்தை உருவாக்கி விட்டோம். சீக்கிரமே முகஸ்துதியிலிருந்தும் மாறி, வார்த்தைகளை வீணடிக்காமல், கருத்துப்படக் கச்சிதமாகப் பேசக் கற்றுக் கொள்வோம் என்று நம்புகிறேன்." (அவுரங்கபாத் 23.12.49)

அரசியல் நிர்ணய சபை தனது பணியை முடித்துவிட்டது. 1950 ஜனவரி 26 முதல் இந்தியா குடியரசாகிவிடும். அப்போது கவர்னர் ஜெனரலுக்குப் பதில் ஒரு ஜனாதிபதி தேவைப்படுவார். முதல் கட்டத்தில் முதல் ஜனாதிபதியை அரசியல் நிர்ணய சபை தேர்ந்தெடுக்கும். ஆனால் இந்தச் சபை, நேரு, பட்டேல் ஆகியோரது விருப்பப்படிதான் இவ்விஷயத்தில் இயங்கும் என்பது தெளிவாகத் தெரிந்தது. 1949 ஜூன் மாதத்தில் இவ்விருவரது விருப்பமும் ஒன்றே. ஸி. ஆர்.தான் ஆட்சித் தலைவராகத் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதே அது. கவர்னர் ஜெனரல் என்ற பெயர் மட்டும் குடியரசுத் தலைவர் என்பதாக மாறும்; அவ்வளவே. பட்டேல், நேரு ஆகியோரின் இந்தக் கருத்து இன்னும் பகிரங்கமாக வெளியிடப்படவில்லை. இந்தக் கட்டத்தில் அரசியல் நிர்ணய சபையின் தலைவராகப் பணியாற்றி வந்த ராஜேந்திர பிரசாத்தின் பெயர் சிலரால் எழுப்பப்பட்டது. இந்த வதந்திகளை முளையிலேயே கிள்ளி எறிய உதவும் விதமாக ராஜேந்திரபிரசாத் ஓர் அறிக்கை விடலாம் என்று பட்டேலும் ஸி. ஆரும் அவரிடம் கோடி காட்டியபோது, ராஜேந்திரபிரசாத் மிகவும் முன்னெச்சரிக்கையாக வார்த்தைகளை அளந்து பேசினார்: "எந்த ஒரு பதவிக்கோ, உயர் கௌரவத்துக்கோ நானும் ராஜாஜியும் ஒருவரோடு ஒருவர் போட்டியிடுவது என்ற பேச்சுக்கே இடமில்லை" என்று கூறியதுடன் நிறுத்திக் கொண்டார்.

இருப்பினும், காங்கிரஸ் கட்சியானது நேரு, பட்டேல் ஆகியோரின் ஒருமித்த சிபாரிசை ஏற்றுச் செயல்படும் என்றே சில காலம் வரை கருதப்பட்டது. ஸி. ஆர்., குடியரசு இந்தியாவின் முதல் ஜனாதிபதியாக அறிவிக்கப்படுவார் என்றே எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் செப்டம்பர் இறுதிக்குள் நிலைமை மாறிவிட்டது. ராஜேந்திரபிரசாத்துக்கு அப்பதவியில் நாட்டமிருப்பது தெளிவாகிவிட்டது. காங்கிரஸில் பெரும்பான்மையினர் பிரசாத் ஜனாதிபதியாவ






ஜாடையாத் தெரிவிக்கறதுக்குத் தான்!

— கே. எஸ். வேலு, சேலம் — 1.

● நடிகையின் உதவியாளர்: ''அம்மா! நீங்கள் முழுகாமல் இருப்பதற்கு, ''வெற்றிகரமான மூன்றுவது மாதம்'' என்று உங்கள் போட்டோவுடன் போஸ்டர் அடித்து ஒட்டலாமா என்று ரசிகர் மன்றத்துத் தலைவர் போனில் கேட்கிறுர்; என்ன சொல்ல?''

— பா. கந்தசாமி, சென்னை — 56.

● ''ராமாயணப் படம் ஒண்ணு எடுத்திருக்கேன், தலைப்பு என்ன வைக்கிறது'ன்னு தெரியலே!''

''சூர்ப்பனகையின் இன்ப வெறி'ன்னு பேர் வைங்க! படம் வெள்ளிவிழாதான்!''

— ஆர். அரிகோபி, குடியாத்தம்.

● கதாசிரியர்: ''ஹீரோ, ரிக்ஷா இழுத்து, ஆட்டோ ஒட்டி, காருக்குச் சொந்தக்காரனுகிறுன்...''

தயாரிப்பாளர்: ''அதெல்லாம் இந்தக் காலத்துக்குச் சரிப்பட்டு வராதுங்க. இப்படி வச்சுப்போம். ஹீரோ, தண்ணி லாரிக்குக் கிளீனரா சேர்ந்து, டிரைவரா மாறி, ஓனரா ஆயிடறுன்...''

— ஸ்ரீதர் சாமா, சென்னை — 49.

● சென்ஸார் ஆபீசர்: அது எப்படீங்க... படம் கலர்லே எடுத்தீங்க... சவுண்டுக்குக் கூட எப்படிக் கலர் கொடுத்தீங்க?

தயாரிப்பாளர்: நீங்க கேட்கிறது புரியலேயே?

சென்ஸார் ஆபீசர்: வசனம் பச்சை பச்சையாக இருக்குதேன்னு கேட்கிறேன்!

— எஸ். மோகன் குமார், பொள்ளாச்சி.

● ஒருவர்: அந்த ரெண்டு பிச்சைக்காரர்கள் மட்டும் எப்பவும் சேர்ந்தே பிச்சையெடுக்கிறுர்களே, ஏன்?

மற்றவர்: தெரியாது? ஒருவர் தமிழ்ப் படம் எடுத்தவர்; இன்னெருவர் அதை வாங்கி விநியோகித்தவர்! பழைய பழக்கதோஷம்தான்!!

— கா. வே. எழில், சென்னை — 4.

---

தையே விரும்பினர் என்பது புரிந்து போயிற்று. நேருவும் பட்டேலும் சேர்ந்து ஒருமுகமாக ராஜாஜியின் பெயரைப் பிரேரேபிக்க மாட்டார்கள் என்பதும் தெரிந்து போயிற்று! இந்த மாற்றத்துக்கு என்ன காரணம்?

ஜவாஹர்லாலுக்கு ஸி. ஆர். ஜனதிபதியாக வேண்டும் என்பதே விருப்பம். ஆனல் காங்கிரஸ் கட்சியைத் தன்னுல், தனி ஒருவனுக அழைத்துக் கொண்டு போய் விட முடியும் என்று கருதியதில் தவறு செய்து விட்டார். மேலும் இரு ராஜதந்திரமற்ற செயல்களையும் புரிந்தார். முதலாவது, ராஜேந்திர பிரசாத்துக்குத் தாம் ஒரு கடிதம் எழுதி, தமது விருப்பத்தை வெளியிட்டு, ஸி. ஆரின் பெயரைப் பிரசாத்தே பிரேரேபிக்க வேண்டும் என்று கேட்டுக் கொண்டால் போதும், எல்லாம் சரியாகப் போய் விடும் என்று நினைத்தார். பட்டேலைக் கலந்தாலோசிக்காமலே இத்தகைய ஒரு கடிதத்தை எழுதி அனுப்பிவிட்டார். அது விபரீதமாகிவிட்டது! பிரசாத்துக்குக் கோபம் வந்துவிட்டது! தம்மை ஸி. ஆருடன் ஒப்பு நோக்கியதில் தமக்குத் தகுதி இல்லை என்றும் ஸி. ஆருக்கே தகுதி உள்ளதாகவும் நேரு நினைக்கிறுர் என்று அந்தக் கடிதத்துக்குப் பிரசாத் அர்த்தம் பண்ணிக் கொண்டு விட்டார்! நேருவின் கடிதத்துக்குப் பிரசாத் எழுதிய பதிலில், ''உங்கள் தோழர்களில் ஒருவனுக, உங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமானவனுக இருப்பேன் என்று நான் நினைத்து வந்தது என்னுடைய முட்டாள் தனம்'' என்று குறிப்பிட்டார்.

பட்டேலின் அறிவுரையை மீறி இரண்டாவதாக ஒரு தவறும் செய்தார் நேரு. காங்கிரஸ் நாடாளுமன்றக் கட்சிக் கூட்டத்தில் 'ஸி. ஆர். ஜனதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்' என்று ஒரு தீர்மானத்தைக் கொண்டு வந்தார். நேரு அமெரிக்கா செல்வதாக இருந்தார்.. அதற்குமுன் பிரச்னைக்கு முடிவு காண எண்ணினர். ஆனல் இந்தத் தீர்மானத்தைப் பலர் எதிர்த்துப் பேச ஆரம்பித்த போது, ஜவாஹர்லால் என்ன செய்வது என்று புரியாமல், பட்டேலை உதவிக்கழைத்தார். பட்டேல் உதவ முன்வரவில்லை; 'நேரு அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்த பிறகு பார்த்துக் கொள்ளலாம்' என்று பிரச்னையை ஒத்திப் போட மட்டுமே உதவினர். அன்று இரவு பட்டேலுக்கு நேரு தமது கைப்பட ஒரு கடிதம் எழுதினர். அதில், தமது தலைமை நிராகரிக்கப்பட்டு விட்டதாகத் தாம் கருதுவதால் அமெரிக்காவிலிருந்து திரும்பியதும் ராஜிமைா செய்வதாகக் குறிப்பிட்டார்!

(தொடரும்)

# ஓய்வு...?

சூரியன் நடு வானத்தில் ஏறி அமர்ந்து கொள்ள இன்னும் சில நிமிடங்களே இருந்தன. தகிக்கும் வெயிலின் கொடுமையை விட இதயத்தில் விழுந்த அடியின் வலிதான் ரணத்தை அளித்தது அவருக்கு.

ஆனாலும் 'அவர்கள்' சொன்னதில் ஓர் அர்த்தமும் இருந்ததே. விலைவாசி இப்படிப் பயங்கரமாக ஏறிக் கொண்டிருக்கும் காலத்தில் வீணாக... வீட்டில் சும்மாவே பொழுதைப் போக்கிக் கொண்டு இருப்பதில் அர்த்தம் இல்லைதான். ஏதோ ஒரு வேலைக்குச் சென்றாலென்ன? நினைக்க என்னவோ நன்றாய்த்தான் இருக்கிறது. ஆனால் கிடைக்க வேண்டுமே...

சரி... அவர்கள் அப்படி என்னதான் சொல்லி விட்டார்கள்? காலையில் நடந்த சம்பவத்தை நினைக்கத் தொடங்கினார்.

"இப்ப நான் என்ன சொல்லிட்டேன்னு என் மேலே எரிஞ்சு விழுறீங்க!"

— வத்சலா சமையல் அறையிலிருந்து கத்தினாள்.

"சரி... சரி... இப்ப ஏன் கத்தறே? அப்பா காதிலே விழுந்துடப் போவுது!"

"விழுந்தால் என்ன? தெரியாமத்தான் கேட்கிறேன்... உங்கப்பாவைப் போலத்தானே நம்ம கோடி வீட்டு... அதாங்க — கோமளத்தோட மாமனாரும்? பென்ஷன் வாங்கறார். இவரை விட அதிகமாகவே வாங்கறார். இருந்தாலும் அவ என்ன சொல்றா தெரியுங்களா?"

"என்னத்தைச் சொல்லப் போறா? 'நானும் என் வீட்டுக்காரரும் நிறைய சம்பாதிக்கிறோம்... என் மாமனாரும் தன் பென்ஷன் பணத்தை எங்கிட்டேயே தர்றார்... இருந்தாலும் மாசக் கடைசியானா இழுத்துக்கோ... புடிச்சுக்கோன்னுதானே இருக்கு'ன்னு சொல்லியிருப்பா...!" சங்கர் இப்படிக் கூறியதும் வத்சலாவின் முகத்தில் கடுகு வெடித்தது.

"அதே நிலைமைதாங்க இங்கேயும்... நம்ம ரெண்டு பேரைக் காட்டிலும் அவங்க நிறையவே சம்பாதிக்கறாங்க... அதே இழுத்துக்கோ... புடிச்சுக்கோ நிலைமைதாங்க நம்ம வீட்லேயும் இருக்கு... இத்தனை நாள் நான் ஏதாச்சும் சொன்னேனா? கான்வென்ட்ல நம்ம குழந்தைகளைச் சேர்த்த பின்னர்... அதுங்களோட ஸ்கூல் ஃபீஸுக்கும் பஸ் ஃபீஸுக்கும் உங்க சம்பளம் சரியாப் போகுது. என்னோட சம்பளமும் உங்கப்பா தர்ற பென்ஷன் பணமும் வீட்டுச் செலவைச் சரிக்கட்டுது. இதுல மாசத்துல பாதி நாள்ல நீங்க இருமறதுக்கும், மிச்சத்துக்கு உங்கப்பா இருமறத்துக்கும் சேர்த்துச் செலவு செய்ய வேண்டியிருக்கு. நானோ... அல்லது புள்ளைங்களோ படுத்துட்டால் போதும்... உங்களுக்கெல்லாம் எங்கிருந்துதான்டி வியாதி வரும்? இதுக்கே நான் இன்னும் தனியாச் சம்பாதிக்கணும்னு சொல்லுவீங்க. இப்படி இருக்கிற இந்த நிலைமையில அந்தத் தணிகாசலம் மாதிரி இவரும் ஒரு 'பார்ட் டைம்' வேலை பார்த்தால் என்னன்னு தானே கேட்டேன்!" ஒரே மூச்சில் கொட்டித் தீர்த்தாள் வத்சலா.

"சரிடி... நீ சொல்ற யோசனையெல்லாம் நல்லாத்தான் இருக்கு... இந்த வயசுக்கு மேலே அவரை வேலைக்கு அனுப்பணுமேன்னுதான் யோசிக்கறேன்!"

"யோசிக்கறதுக்கு என்னங்க இருக்கு...? கோமளத்தோட மாமனாருக்கு மட்டும் வயசாகலையா என்ன? நான் பூராவுமா வேலை செய்யச் சொ ல் ல ப் போறேங்க? அதுவுமில்லாமே வீட்ல சும்மாவே உட்கார்ந்திட்டுப் போரடிச்சுட்டு இருக்கறதுக்கு... இப்படி வேலைக்குப் போனால் மனசுக்குத் தெம்பும் ஒரு புத்துணர்ச்சியும் கிடைக்குமே!"

சுழலும் ஃபேனின் ஷ்... ஷ்... ஷ் ஒலியைத் தவிர அந்த அறையில் நிசப்தம் நிலவியது.

மௌன மேகத்தைக் கலைத்தான் பிரபாகரன்.

பிரபாகரன் 'இவரிடம்' படித்து... பட்டம் பெற்று உயர்ந்த நிலையில் இருப்பவன்...

"சார்.... நான் சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க... உங்களுக்கு வேலை தர்ற நிலைமையிலே நான் இல்லே... நீங்க நினைக்கிற மாதிரி வேறு அர்த்தம் இல்லே... உங்களை வேலை வாங்கற சக்தி எனக்கு இல்லேன்னு சொல்ல வந்தேன். இதைத் தவிர என்னாலே உங்களுக்கு எந்த உதவி வேணுமோ... தயங்காமல் கேளுங்க சார்... காத்திட்டிருக்கேன்.."

மௌனமாய்ச் சில வினாடிகள் கரைய...

"ஓ.கே. சார்.. உங்களுக்குக் கண்டிப்பா வேலை வேணும்னு நினைச்சீங்கன்னா இதோ... இந்த 'அட்ரஸ்'ல என் நண்பன் ஒருத்தன் 'ஃபைனான்ஸ் கம்பெனி' நடத்தறான். இந்தக் கடிதாசைக் கொடுத்தீங்கன்னா உடனே உங்களுக்கு வேலை போட்டுத் தருவான்."

"தேங்க்ஸ்ப்பா...! என்றைக்கும் உன்னை மறக்க மாட்டேன்!" கையெடுத்துக் கும்பிடப் போனபோது.

"சார்... நான் என் கடமையைத்தான் செய்தேன்... நீங்க போய் எனக்கு 'தேங்க்ஸ்' சொல்றது நல்லா இல்லே!"

பிரபாகரன் சொன்ன இடத்துக்குப் போனார். உடனே வேலை கிடைத்தது. — கனவா? நிஜமா? வெளியே வந்தவர், குடையை விரிக்க, தலை குளிர்ந்தது. நெஞ்சைப் போலவே.

'அப்பாடா! 'எனக்கும் ஒரு வேலை கிடைத்துவிட்டது. மருமகள் சொன்ன மாதிரி சம்பாதிக்கணும். ம்... முதல்



சம்பளம் வாங்கியவுடன் என்ன செய்யலாம்?

— நினைக்க நினைக்க மனம் மல்லிகைப் பூவாய் விரியத் தொடங்கியதும் வீட்டை நோக்கி நடந்தார்.

“என்னங்க... மாமா வந்துட்டார்... டேய் சுரேஷ்... தாத்தா வந்திட்டார்டா... போ... போய்க் கூட்டிக்கிட்டு வா...!''

— பதினாறு வயது மங்கையாக வத்சலா பரபரப்பாகக் காணப்பட்டாள்.

''என்னப்பா, எங்கே போய்ட்டீங்க? காலையிலிருந்தே காணோம்னு தவிச்சுப் போயிட்டோம். எங்கேன்னு ஒரு வார்த்தை சொல்லிட்டுப் போகக் கூடாது?''

—'என்ன ஆயிற்று இவர்களுக்கு? காலையில் நடந்ததற்கும் இப்பொழுதுக்கும் நிறைய வித்தியாசம்... ஒருவேளை சங்கருக்குப் பிரமோஷன் ஆர்டர் வந்திருக்குமோ...? இல்லையே! போன மாதம்தானே அஸிஸ்டென்ட் மானேஜரானான்?'

''என்னம்மா... என்ன விஷயம்?''

''இதோ... நீங்களே படிச்சுப் பாருங்க!'' என்று பழுப்பு நிறக் கவரை நீட்டினாள்.

ட்ரெஷரி ஆபீசிலிருந்து வந்திருந்தது. அதில், நீண்ட காலமாக 'ரிவைஸ்' பண்ணாமலிருந்த அவர் பென்ஷன் தொகை, மேற்கண்ட ஆர்டர் மூலம் 'ரிவைஸ்' செய்யப்பட்டு, பென்ஷன் தொகை, இராக்கிப்படி, மருத்துவ அலவன்செல்லாம் சேர்த்து மொத்தம் ரூ. 950/— வரை கிடைக்கக் கூடும் என்றும், இந்த மாதத்திலிருந்தே அமுலுக்கு வருகிறது என்றும் குறிப்பிடப்பட்டிருந்தது.

''மாமா... நான் காலையில் பேசினதையெல்லாம் மனசுல வெச்சுக்காதீங்க... நீங்க எங்கேயும் வேலைக்குப் போக வேண்டாம். கூடுதல் பென்ஷன் பணம் நானூறு ரூபாய்க்கு மேல் கிடைக்குமே... போதும்... வீட்டிலே பேப்பர் படிச்சுட்டு நிம்மதியா இருந்தாலே போதும்!''

''இல்லேம்மா... நான் நாளையிலிருந்தே வேலைக்குப் போறதாத் தீர்மானம் பண்ணிட்டேன். இன்னைக்கு வர்ற பென்ஷன் பணம் இன்னைக்குச் சரியாப் போகும்... நாளைக்குப் பேரக் குழந்தைகள் பெரிசாகி ஹைஸ்கூல்னு போகும்போது திரும்பவும் இழுத்துக்கோ புடிச்சுக்கோன்னுதானே இருக்கும்? அதுவுமில்லாம வீட்டிலே சும்மாவே உட்கார்ந்துக்கிட்டிருக்கறதுக்கு எனக்கும் போரடிக்கும்!'' என்றார்.

பழுப்பு நிறக் கவர் காற்றில் படபடத்தது.

— கோவை ரம்யா

* எம். ரமேஷ்குமார், போடிநாயக்கனூர்.

? ஓவியர் மருதுவின் புகைப்படத்தை வெளியிடுவீர்களா? (எனது நெடுநாள் ஆசை.)

! ஓ. எஸ்! கதாசிரியரின் கற்பனையுடன் போட்டியிடும் விதமாக ஓவியத்திலும் கற்பனைத் திறனைக் காட்டும் அவருடைய புகைப்படத்தைக் கற்பனை ஏதுமின்றி — உள்ளது உள்ளபடி — வெளியிடுகிறோம்!

* ரகுராம், சென்னை — 3.

? பாரதிய ஞானபீடத்தின் இந்த ஆண்டு இலக்கியப் பரிசு பெற்றவர் பற்றி ஏதேனும் தெரியுமா?

! எனக்குத் தெரியாவிட்டால் என்ன? தெரிந்தவரிடம் கேட்டுச் சொல்கிறேன்; குறித்துக் கொள்ளுங்கள்! ஒன்றரை லட்சம் பெறுபவர் ஒரிய மொழிக் கவிஞர். சச்சி ராவுத் ராய்க்கு இன்று வயது 70. பதினொரு வது வயதிலேயே முதல் கவிதைத் தொகுப்பு

## ஏக்ஸ்பிரஸ் நிறுவனங்களில் 'ரெய்டு' நடந்தது நியாயமா?

நூலை வெளியிட்ட இவர், சுதந்திரப் போராட்ட வீரர். மாணவர் இயக்கத்தில் சிறை சென்றவர். சச்சியின் பாடல்கள் அலங்கார அணிகள் இன்றி, எளிய நடையில், அழுத்தமான கருத்துக்களைப் பேசின:

குண்டு வீசுங்கள்,
குறி பார்த்துச் சுடுங்கள்,
எங்கள் திறந்த மார்பினை
உமது குண்டு தாக்கட்டும்!
உங்கள் லாத்திக் கழிகளை
வீசி அடியுங்கள்!
கவலை இல்லை;
எங்கள் மார்புகள், பாறை மார்புகள்!

அன்றைய பிரிட்டிஷ் ஆட்சி இவர் பாடல்களுக்குத் தடைவிதித்ததில் வியப்பென்ன!

* த. சத்தியநாராயணன், அயன்புரம்.

? 'அரசியலில் குதிக்க எனக்குத் திறமை இல்லை' என ரஜினிகாந்த் கூறியிருக்கிறாரே?

! 'என்னய்யா, விவரம் தெரியாதவராய் இருக்கிறீரே; அரசியலில் குதிக்கத் திறமை எதற்கு?' என்று நாம் திருப்பிக் கேட்க வேண்டியதுதான்.

* க. தியாகராஜன், நெய்வேலி.

? வறட்சியால் பாதிக்கப்பட்ட இடங்களைப் பிரதமர் போய்ப் பார்ப்பதால் என்ன லாபம்?

! கேட்கப்படும் பணத்தில் பாதியாவது கிடைக்கும்; அதில் பாதியாவது மக்களைச் சென்றடையும்!

* ராஜேந்தர் பிரியன், திருச்சி.

? ஐம்பது பைசா உயர்த்துகிறீர்களே, எங்களால் தாக்குப் பிடிக்க முடியுமா? இருபத்தைந்து பைசா உயர்த்தலாமே?

! அரசு, பத்திரிகைக் காகித விலை உயர்வைப் பாதியாகக் குறைத்தால், நாங்களும் பத்திரிகையின் விலை உயர்வைப் பாதியாகக் குறைக்க முடியும். எங்களால் மட்டும் தாக்குப் பிடிக்க முடியுமா என்ன?

* எம். பி. லெட்சுமணன், கொச்சின்.

? 'பொது மக்களில் எண்பது சதம் நாணயமற்றவர்கள்' என்று அமைச்சர் நெடுஞ்செழியன் கூறியது பற்றி...?

! இன்னும் கொஞ்ச நாட்கள் போகட்டும்; 'மன்னுயிர் எப்படி, மன்னன் அப்படி' என்று பழமொழியைப் புரட்டிப் போட்டுக் கூடப் பேசுவார்கள்! அரசியல்வாதிகளுக்குச் சொல்லித் தரவா வேண்டும்!

* மு. செந்தில்வாசன், திருமருகல்.

? 'தீவிரவாதிகளைச் சமாளிக்க மக்கள் பாதுகாப்புப் படை அமைக்க வேண்டும்' என்று மத்திய மந்திரி ப. சிதம்பரம் யோசனை தெரிவித்திருக்கிறாரே?

! மக்களைப் பாதுகாக்கத் தங்களால் முடியவில்லை என்று ஒப்புக் கொள்வதற்குச் சமானம்தான் இது. இந்நிலை நீடித்தால் மக்கள், தாங்களே பாதுகாப்புப் படை அமைத்துக் கொள்ள வேண்டியதுதான்! பொன்பரப்பியில் மக்கள் இதைத்தான் நிரூபித்திருக்கிறார்கள்.

* செல்வபாரதி, சேலம்.

? நதிகளைத் தேசிய மயமாக்குவதில் உள்ள தடை என்ன?

! பிராந்தியப் பற்று.

* ஆதிமூலம், நாகப்பட்டினம்.

? தஞ்சை பந்த் முழு வெற்றிதானே?



• ஓவியக் கற்பனை!

! ஒப்புக் கொள்கிறேன். காவிரி நதிநீர்ப் பிரச்னை பற்றிய ஒரு கவன ஈர்ப்புத் தீர்மானமாகக் கூட விளங்கும். ஆனால் பிரச்னைக்கு விடிவு காலம் பிறக்குமா? சந்தேகமே. செய்ய வேண்டியதைக் காலத்தோடு செய்யாமல், மெத்தனமாகத் தமிழக அரசு இருந்து விட்டதால் இனி காவிரி நீர், தஞ்சையைப் பொறுத்தமட்டில் கானல்நீர் என்றே தோன்றுகிறது.

* லலிதா, பம்பாய்.

**? எக்ஸ்பிரஸ் நிறுவனங்களில் 'ரெய்ட்' நடந்தது நியாயமா?**



• ஞானபீடப் பரிசு!

! நாட்டின் பிரதமர் கூட சட்டத்துக்கு அப்பாற்பட்டவரல்ல என்னும்போது, கோயங்கா எப்படிச் சட்டத்துக்கு அப்பாற்பட்டவராவார்? எனவே, இந்தச் சோதனைகளின் விளைவாக அவர் குற்றம் புரிந்திருப்பதாக நிரூபணமானால் அதற்குரிய தண்டனையை ஏற்க வேண்டியவர்தான். அப்படி ஏதும் நிரூபணமாகவில்லை எனில், 'பழிவாங்கும் படலம்தான் இது' என்று ஜெயில் சிங் உள்பட்ப் பலர் கண்டித்திருப்பதே மெய்யாகும். இது ஒருபுறமிருக்க, கோயங்காவின் சில லட்சம் ஊழலை அம்பலப்படுத்தி விட்டதாக ஆட்சியாளர் மார் தட்டுவதன் மூலம், ஆட்சியாளருடைய பல கோடி ஊழல்களை மூடி மறைத்து விட முடியாது. அதைத் தட்டிக் கேட்கும் தகுதியை எக்ஸ்பிரஸ் பத்திரிகையிடமிருந்து பறித்து விடவும் முடியாது!



• திறமை எதற்கு?

* த. ஜெயக்குமார், கொப்பம்பட்டி.

**? டீ. வி. ஜனவாணி நிகழ்ச்சியில் பொது மக்களின் கேள்விக்குப் பதில் கூறத் தாம் தயாராய் இருப்பதாக ராஜீவ் கூறியுள்ளது குறித்து...?**

! அந்தப் பொது மக்களில் ஒருவராக ஜெத்மலானி இருந்து கேள்விகள் கேட்க டீ. வி. நிலையம் சம்மதிக்குமா? அதைக் கேட்டுச் சொல்லுங்கள்!



• கற்றுத் தரவா வேண்டும்!

* எம். பஷீர், ஹைதராபாத்.*

**? விசாரணைக் கமிஷன் பற்றி ஒரு ஹைகூ?**

! ரொம்பக் காலம் முன்பே 'கல்கி' தமது ஒரு தலையங்கத்துக்குக் கொடுத்த தலைப்புத்தான் நினைவுக்கு வருகிறது:

பிரச்னையின் தலையில்
கல்லைப் போடு;
அல்லது
கமிஷனைப் போடு!



• பழிவாங்கும் படலம்?

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

எம். பஷீர்,
6-4-419, போலக்பூர்,
ஹைதராபாத் — 500 380.



• ஒப்புதல் வாக்குமூலம்!



# ஓர் அழகிய ஆக்கிரமிப்பு!

அமரர் கல்கி மீதும் ரசிகமணி டி. கே. சி. மீதும் கோபம் கோபமாக வரும் —

மூலைக்குமூலை பரத நாட்டியப் பள்ளிகள் தோன்றியிருப்பதையும் ஆறுமாதப் பயிற்சி ஆன உடனே அரங்கேறப் பலர் ஆசைப்படுவதையும் பார்க்கும் போது.

"எல்லாம் அந்த இருவரால் வந்த வினை! பரதநாட்டியக் கலையின் மறுமலர்ச்சி என்று கூறிக்கொண்டு பக்கம் பக்கமாக் எழுதியும் பேசியும் எக்கச்சக்கமாக ஆர்வத்தை வளர்த்து விட்டு விட்டார்கள். இப்போது நாம் கிடந்து அவஸ்தைப்பட வேண்டியிருக்கிறது" என்று தோன்றும்!

ஆனால் எப்போதாவது ஒரு சமயம் ஒரு முதல் தர நடனத்தைப் பார்க்க நேரும் போது. "அடடா! இந்த ஒரு நிகழ்ச்சிக்காக, எவ்வளவு மோசமான நிகழ்ச்சிகளையும் சகித்துக் கொள்ளலாமே; ரசிகமணியும் கல்கியும் அன்று கொடுத்த ஆதரவுதானே இந்த அற்புதத்தை அரங்கேற்றியிருக்கிறது" என்று மனத்தில் நன்றி பெருகும்!

அப்படி ஒரு மன நிறைவை அளித்த நிகழ்ச்சியை அண்மையில் மியூஸிக் அகாடமி அரங்கில் கலாமந்திர் ஆதரவில் அளித்தார் நித்ய கல்யாணி. அடையாறு லக்ஷ்மணனின் மாணவியான இவர், அரங்கேறி ஆடினார் என்பதைவிட அரங்கை ஆக்கிரமித்து ஆடினார் என்பது பொருந்தும். நமது மனங்களைக் - கூடத் தான்!

அடையாறு பாணி, கடினமான பாணி. கசக்கிப் பிழியும்; கசரத்து வாங்கும்! அதன் பாரம்பரியத்தை உணர்ந்தவர்களுக்கு இது அதிசயமாயிராது. பாதவேலைகளாகட்டும் கரங்களின் அசைவுகளாகட்டும் விண் விண்ணென்று தெறிக்க வேண்டும்; அதில் ஒரு நளினமும் இருக்க வேண்டும். நித்ய கல்யாணி இந்தக் கடினமான பாணிக்கு ஈடு கொடுத்து ஆடியது சிறப்பு; அதே சமயம் அநாயாசமாக ஆடுவது போல் காட்டிக் கொண்டது வியப்பு!

'கலைகளில் புதுமையைப் புகுத்துகிறேன்' என்று சொல்லிக் கொண்டு, இன்றைக்குப் பலர், பலவித பரிசோதனைகளை நிகழ்த்துகிறார்கள். பிள்ளையார் பிடிக்கப் போய்க் குரங்காய் முடிந்த கதையாகி விடுகிறது. அப்படியின்றி, பாரம்பரிய மரபைக் கைவிடாமலே பரதத்தில் பல புதுமைகளைப் புகுத்துவதுதான் சிறப்பு; கற்பனை ஆற்றல் எல்லாம். கருவறையில் உள்ள கடவுளுக்குப் பலவித அலங்காரங்கள் செய்து பார்த்து மகிழலாம்; ஆனால், 'ஆறுமுகனுக்கு இரண்டு தலைகள் போதாதோ?' என்று கேட்கலாமா? அப்படித்தான் பரதக் கலையையும் அணுக வேண்டும்.

இதைப் புரிந்து கொண்டிருப்பவர் அடையாறு லக்ஷ்மணன் மட்டுமல்ல; நித்யகல்யாணியின் அபிநயங்களுக்குச் சிறப்புப் பயிற்சி அளித்துள்ள கலாநிதியும் கூடத்தான். 'விரிபோணி' வர்ணத்தில் அழகுணர்ச்சியையும் 'நேற்று வரேனென்று' பதத்தில் உருக்கத்தையும் நித்ய கல்யாணி உணர்த்தியது இருக்கட்டும். 'பருவனமாட' பாடலுக்கு அபிநயித்தபோது ஹாஸ்ய ரசத்தையும் அல்லவா அள்ளித் தெளித்துவிட்டார்!

என்னதான் ஆடினாலும் பதங்கள் பாடுவதிலும் ஜதிகள் சொல்வதிலும் மிருதங்கம் வாசிப்பதிலும் ஒத்துழைப்பு இல்லா விட்டால் போச்சு! ஆட்டம், பாட்டமாகி விடும். நித்யகல்யாணி இந்த விதத்திலும் அதிர்ஷ்டசாலி.

— குட்டி கிருஷ்ணன்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி — 1987

# பரிசு பெற்ற சிறுகதைச் சிற்பிகள்

"என்னை மகிழ்ச்சிக் கடலில் திக்கு முக்காட வைத்து விட்டீர்கள்; ஒரு பெரிய பரிசைத் தந்து என்னை வளர வைத்தமைக்கு நன்றி" என்று உணர்ச்சிப் பரவசத்தில் கடிதம் எழுதிய 'பாரதி' வீரராகவனுக்கு நாம் சொல்லக்கூடியது ஒன்றுதான்: 'முதல் பரிசு பெற்ற அவருடைய கதை 'பின்னணி' கல்கி வாசகர்களை மகிழ்ச்சிக் கடலில் திக்கு முக்காட வைத்து, உணர்ச்சிப் பரவசத்துடன் ஏராளமான கடிதங்களை எழுதச் செய்தது' என்பதுதான்!

"நான் அதிகமாகக் கதைகளை எழுதுவதில்லை. மன உந்துதலைத் தாங்க முடியாத நிலையில்தான் எழுத்திலே எண்ணங்களை வடிக்கிறேன்" என்று கூறும் பாரதி வீரராகவனைப் பத்திரிகை உலகில் அறிமுகப்படுத்தியவர்: சாவி. மொரப்பூரில் சிறிய உணவகம் நடத்தி வரும் இந்த எழுத்தாளர், கடந்த ஆறு ஆண்டுகளில் குமார் பத்து கதைகள்தான் எழுதியிருக்கிறார் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

• பாரதி வீரராகவன்

• தமிழினியன்

• அபூர்வன்

• ஜெயலக்ஷ்மி

இதற்கு நேர் மாறாகத் 'தமிழினியன்' கடந்த இருபத்திரண்டு ஆண்டுகளாக ஏராளமான சிறுகதைகளை எழுதி வந்திருக்கிறார். "எனக்குக் கிடைத்தது இரண்டாம் பரிசு என்று நான் கருதவில்லை. காரணம், என் கதை ஒன்றுக்காக நான் பெறும் முதல் பரிசு இதுதான்!" என்கிறார் அஜீஸ். 'தமிழினியன்' என்ற புனைபெயரில் அஜீஸ் எழுதியுள்ள சிறுகதைகள் நானூறுக்கும் அதிகம்! 1965 இல் குமுதத்தில் எழுத ஆரம்பித்த இவரது சிறுகதைத் தொகுப்புக்கள் பல, நூல் வடிவம் பெற்றுள்ளன. திருச்சி, பாய்லர் தொழிற்சாலையில் பணியாற்றும் 'தமிழினிய'னின் "மணி மணியாய் ஐம்பது இளைஞர்கள்" அவரது மணியான கதைகளுள் ஒன்று. இல்லாமலா முதல் பரிசுக்குப் 'பின்னணி' யுடன் போட்டியிட்டது!

மூன்றாவது பரிசு பெற்ற இருவருமே அறிமுக எழுத்தாளர்கள். எனவே பரிசுத் தொகையுடன் போனஸும் சேர்ந்து கொள்கிறது! 'அபூர்வன்' என்ற புனைபெயரைச் சூடிக் கொண்டிருக்கும் ராஜா, அபூர்வமாகக் கதைகள் எழுதாமல், அடிக்கடி எழுத வேண்டும் என்றும் ஆனால் அதேசமயம் அவரது கதைக் கருக்கள் அபூர்வமானதாய் அமைய வேண்டும் என்றும் வாழ்த்துகிறோம். ராஜா, கோத்தகிரி, தொலைபேசி நிலையத்தில் ஒலியேந்தி உதவியாளர்.

மத்திய அரசின் தகவல் துறையைச் சேர்ந்தவர் ஆர். ஜெயலக்ஷ்மி. பம்பாயில் உதவித் தகவல் அதிகாரியாகப் பணியாற்றுகிறார். இதற்கு முன் இவர் வானொலியில் செய்தி அறிவிப்பாளராக இருந்த போது இவர் குரல் மட்டும் பலருக்கு அறிமுகமாகி, கேட்டுப் பழகிய ஒன்றாய் விளங்கியது. 'சம்பக்' என்ற குழந்தைகள் பத்திரிகையைத் தமிழாக்கம் செய்வதிலும், தேசியப் புத்தக நிறுவனத்துக்காக மகாத்மா காந்தி வாழ்க்கை வரலாறு சுருக்கத்தைத் தமிழாக்கம் செய்வதிலும் உழைத்திருக்கிறார். ஜெயலக்ஷ்மி சிறுகதை உலகிலும் இனி ஜெயக்கொடி நாட்ட வாழ்த்துகிறோம்!

## சென்னை - திருச்சி - வேலூர் - கோவை - மதுரை - நெல்லை

# சேலம் கவிராஜ் டாக்டர் சிவராஜ் - சிவகுமார் அவர்கள் விஜயம்



S.R. சிவராஜ்

சென்னை:
6, 7 தேதிகளில் [illegible] P. ORR & SONS அருகில் [illegible] காலை 8 to மாலை 7 மணி [illegible] 566526,

திருச்சி:
5ம் தேதி [illegible] காலை 8 to மாலை 5 மணி

வேலூர் (N.A.): 11ம் தேதி [illegible] காலை 8 to மாலை 5 மணி

கோவை: 13ம் தேதி [illegible] காலை 8 to மாலை 5 மணி

மதுரை: 22ம் தேதி [illegible] காலை 8 to மாலை 5 மணி

நெல்லை: 23ம் தேதி [illegible] காலை 8 to மாலை 5 மணி,

| வசதி உள்ளவர்களுக்கு உயர்தரக சிகிச்சை | | |
|---|---|---|
| A-1 ஸ்பெ. சிகிச்சை | B-1 சிகிச்சை | C-1 சிகிச்சை |
| 1750-00 | 1000-00 | 650-00 |

| நடுத்தர சிகிச்சை (1 மாத சிகிச்சைக்கு) | | | |
|---|---|---|---|
| A வகுப்பு | B வகுப்பு | C வகுப்பு | ஆலோசனை |
| 450-00 | 350-00 | 250-00 | 10-00 |

### வாலிப நண்பர்களுக்கும் மணமான நண்பர்களுக்கும் அறிவிப்பு

என் அருமை வாலிபர்களே! நம் வாழ்க்கையில் பருவமான வயதில் நாம் தெரிந்தோ, தெரியாமலோ அறிந்தோ, அறியாமலோ கெட்டவர்கள் சகவாசத்தாலோ தவறான வழிகளில் நம் ஜீவசக்தியை வீணாக்கி வருவதால், ஆரம்பத்தில் ஒரு கெடுதலும் தெரியாது சில ஆண்டுகள் பொறுத்து நம் உடல்நிலை வீழ்ச்சியடைந்து [illegible] பாதிக்கப்பட்டு வேதனையும், மனத் தளர்ச்சி — உடல் தளர்ச்சியால் மனநிலை, உடல் பாதிப்பு — நரம்புத் தளர்ச்சி — உறுப்புகள் தளர்ச்சி — இருதய பலஹீனம் — நடுக்கம் — பயம் — உடலில் சக்திக்குறைவு, இடுப்பு — முதுகு நடுத்தண்டு மூட்டுகளில் வலி — வெட்கம் — நிலை ஏமாற்றம் — முயற்சித்தும் முடியாமை — இன்னும் சொல்லக் கூச்சப்படும் அளவிற்கு மனப்போராட்டம் குழந்தை செல்வம் பெற கல்யாணம் செய்யப் பயப்படுகிறவர்களும் — மணம் செய்தும் திருப்தியில்லா நிலை — சந்தேகம் — முன்கோபம் — தூக்கமின்மை — கண் எரிச்சல் — முகம் ஒட்டிப் போதல் — [illegible] பார்ப்பவர்களுக்கு நல்லாவிருந்தும், வாழ்க்கையில் ரசனையை பூரணமாகப் பெற இயலாமல் வேதனையடைவது போன்றவைகளால் பாதிக்கப் படுகின்றவர்கள் ஏராளம்.

நம்பிக்கையான வைத்திய ஆலோசனையும் — ஆரோக்கியம் பெற ஆரோக்கியமும் பெற

## 168 வருடங்களாக தமிழகத்திலும் கர்நாடக மாநிலத்திலும் 6 தலை-முறைகளாக தொடர்ந்து சித்தவைத்தியம் செய்துவரும் ஒரே பரம்பரைகுடும்பம்



R.S. சிவகுமார்

| முப்பாட்டனார் | பாட்டனார் | தகப்பனார் | நான் | எனது மகன் |
|---|---|---|---|---|
| முத்துலிங்கசுவாமி வைத்தியர் | சுப்பிரமணிய வைத்தியர் | நாதலிங்கம் வைத்தியர் | சிவராஜ் வைத்தியர் | சிவகுமார் வைத்தியர் |

இந்திய வைத்திய போர்டாரால் அங்கீகாரம் பெற்ற ஸ்தாபனம். இங்கிலாந்து 6ம் ஜார்ஜ் மன்னரின் கார்னேஷன் மெடல் பெற்ற ஸ்தாபனம். ஏற்றுமதி லைசென்ஸ் பெற்ற ஸ்தாபனம்.

குறிப்பு: நேரில் சந்திக்க முடியாதவர்கள் வியாதி விபரங்களை [illegible] எழுதி குறிப்பிட்ட சிகிச்சை மருந்துக்கு பணம் அனுப்பி பெற்றுக் கொள்ளலாம். [illegible] நேரடியாக சந்திக்க விரும்புவர்கள் பிரதி மாதம் 2, 3, 4, 8, 10, 12, 14, 15, 16, 17, 18, 19, 20, 21, 24, 25, 26, 27, 28, 29 & 30ம் தேதிகளில் காலை 7 மணிமுதல் மாலை 7 மணிவரை சந்தித்து சிகிச்சை பெற்றுக்கொள்ளலாம். விடுமுறை கிடையாது.

## சேலம் சிவராஜ் சித்த வைத்தியசாலை, C-18-A, தமிழ் சங்கம் ரோடு, சேலம்-7.

# தகுதி



இன்று எனது எட்டாவது படையெடுப்பு. அதான் சார் — இண்டர்வியூ — தனியார் கம்பெனி ஒன்றில், காலை 9.00 மணிக்கு.

அந்த அலுவலகத்தை நான் அடைந்தபோது என்னையும் சேர்த்து எட்டுப் பேர் காத்திருப்பதை அறிந்தேன். போட்டிக்குத் தயாரானேன்.

''யார் சார் இங்கே மூர்த்தி?''

''ஏன், நான்தான். என்ன விஷயம்?'' என்றேன்.

''விஷயம் என்ன விஷயம்? உன்னைத்தான் ஐயா முதல்ல வரச் சொன்னார். இடக்கைக்கா போனா முதல் ரூம். எம். டின்னு போட்டிருக்கும் பார்'' என்றான்.

அவன் ஒருமையில் பேசியது என்னை மிகவும் பாதித்தது.




'என்ன படித்தாலும் ஒரு வேலை இல்லாட்டா எங்கேயும் மதிப்பு இல்லையே' யோசித்தவாறே நடந்தேன்.

அந்த போர்டைப் பார்த்ததும் நின்றேன். 'தீனதயாளன், பி. ஏ.'

"குட்மார்னிங் ஸார்!"

"எஸ் கமின். ஸோ, நீங்கதான் மூர்த்தி. வயது இருபத்தி ஐந்து." மேலோட்டமாய் என் அப்ளிகேஷனைப் பார்த்தார். "ஏன் இதுவரைக்கும் வேலை எதுவும் கிடைக்கலியா? முன் அனுபவம் எதுவும் இல்லை போலிருக்கே?" என்று இழுத்தார்.

"நான் சமீபத்துலதான் என் படிப்பை முடிச்சேன். எட்டு மாசமாத்தான் வேலை தேடிட்டிருக்கேன் ஸார்."

அப்போதுதான் கவனித்தது போல் கேட்டார். "ஓ! நீங்க எம். ஏ. எம். பில். படிச்சிருக்கீங்களா?. அப்ப...?" — மீண்டும் இழுத்தார்.

"என்ன சார்?"

"தப்பா நினைக்காதீங்க. உங்க படிப்புக்கு ஏத்த வேலை இங்கே இப்ப எதுவும் இல்லை. இந்த வேலைக்கு... உங்க படிப்பு அதிகம். அதனால உங்களை..." முடிக்காமல் இழுத்தார்.

அவசர அவசரமாய்க் குறுக்கிட்டுச் சொன்னேன். "இல்லை சார், நான் என் படிப்புக்கு ஏத்த வேலையோ சம்பளமோ கேக்கலை. இப்ப இருக்கிற நிலைமைல நீங்க என்ன வேலை கொடுத்தாலும் சரி, என்ன சம்பளம் தந்தாலும் சரி... ப்ளீஸ்!" என்றேன்.

"ஸாரி மிஸ்டர் மூர்த்தி. உங்களுக்கு நாங்கள் நல்லாப் பயிற்சி கொடுத்து முடிக்கவும், உங்களுக்கு வேறே நல்ல வேலை கிடைக்கவும் சரியா இருக்கும். அப்ப நீங்க எங்களுக்கு டாடா காட்டிட்டுப் போயிடுவீங்க. திரும்பவும் உங்க இடத்துக்கு ஆள் எடுக்கப் பணம் செலவழிக்கணும். நாங்க முட்டாளாகத் தயாரா இல்லை. நீங்க போகலாம்." — அழுத்தமாய்ச் சொன்னார்.

எனக்குள் கோபமும் ஏமாற்றமும் பொங்கிய அந்த நிமிஷத்தில் மெதுவாய் அவற்றை அடக்கிக் கொண்டு எழுந்தவாறே கேட்டேன்: "என்னோட எம். ஏ. டிகிரிதானே உங்களை உறுத்துது?" அமைதியாய்ப் பேசிக் கொண்டே அதைக் கையிலெடுத்து எட்டாய்க் கிழித்தேன். "இப்ப சொல்லுங்க சார். இந்த வேலைக்கு நான் தகுதியுள்ளவனா?"

எம். டி. அதிர்ந்தார். என் கண்களிலிருந்து பொங்கிய நீரைப் பார்த்ததும் என்ன தோன்றியதோ, வேகமாய் எழுந்து என் தோளை அழுத்தினார். "என்ன மூர்த்தி இது? ஏன் இப்படி ரியாக்ட் பண்ணிட்டீங்க?"

"என்னோட உடனடித் தேவை ஒரு வேலையும் கொஞ்சம் பணமும். இந்த டிகிரி இல்லை சார்... இது எனக்கோ என் குடும்பத்துக்கோ சோறு போடாது சார். அதனால் இந்த இழப்புப் பரவாயில்லை." உருக்கமாய்ப் பேசினேன்.

அவசர வேலையாய் உள்ளே நுழைந்த அவரது ஸ்டெனோ என்னையும் மேஜையில் கிடந்த காகிதத் துண்டுகளையும் மாறி மாறிப் பார்த்தாள். அதிர்ந்தாள்.

எம். டி. அவளிடம் சொன்னார்: "மிஸ் ஷீலா. இவருக்கு அப்பாயின்ட்மெண்ட் ஆர்டரை டைப் செஞ்சு குடுத்தனுப்புங்க முதல்ல." திரும்பி என்னிடம் சொன்னார்: "இன்னிக்கு சனிக்கிழமை. திங்கட்கிழமை காலைல நீங்க வேலைல சேரலாம் மூர்த்தி. உங்களுக்கு இந்த வேலைல இருக்கிற தீவிரம் எனக்கு ரொம்பப் பிடிச்சிருக்கு." முதுகில் தட்டி வாழ்த்தினார்.

ஆர்டரைக் கையில் வாங்கிக் கொண்டு வெளியே வந்தேன். அதிர்ச்சியில் இருந்து இன்னமும் மீளாத அந்த ஸ்டெனோ தயங்கியவாறே கேட்டாள்.

"தப்பா நினைக்காதீங்க. எழுநூறு ரூபாய் சம்பளம் தர்ற இந்த வேலைக்காக எம். ஏ. டிகிரியைக் கிழிச்சுட்டீங்களே! பின்னாடி உங்களுக்கு நல்ல வேலை கிடைச்சிருக்குமே. அவசரப்பட்டுட்டீங்களே. உங்க படிப்புக்கு நீங்க தர்ற மதிப்பு அவ்வளவுதானா?"

அடக்க முடியாமல் சத்தமாய்ச் சிரித்தேன்.

"நோ மேடம். நான் முட்டாள் இல்லை. என் படிப்பையும் நான் அவமரியாதை செய்யலை. என் படிப்போட மதிப்பு இந்தப் பேப்பர்ல இல்லை. என் மூளைக்குள்ள அது பத்திரமா இருக்கு. இது. இந்த டிகிரி, என் படிப்புக்கான அத்தாட்சி. அவ்வளவுதான். பேப்பரைக் கிழிச்சா என் படிப்பு அழியாது. இந்த வேலைக்கு என் படிப்பு அதிகம். எனக்கே அது தெரியும். ஆனாலும் அதைக் காரணம் காட்டி உங்க எம். டி. என்னை நிராகரிக்கறதாக நினைச்சார். ஆனால் உண்மையான காரணம், அவரே என்னைவிடக் குறைச்சலாப் படிச்சதுதான். நான் உள்ளே போகறச்சேயே அந்த போர்டுலே அவரோட படிப்பைப் பார்த்தேன். அவரோட ஈகோ எனக்கு இந்த வேலை கிடைக்க விடாதுன்னு தோணிச்சு. உடனே இப்படிச் செய்யறதாத் திட்டம் போட்டுட்டேன். இப்ப, எனக்கு வேலையும் கிடைச்சாச்சு. யாரும் எதையும் இழக்கலையே" என்று பேசியவாறே என் உடைமைகளுடன் கிளம்பினேன்.

அறையை விட்டுக் கிளம்புமுன் திரும்பி அவளிடம் சொன்னேன். "மேலும், நான் கிழிச்சது என் டிகிரியோட நகல்தான். ஜெராக்ஸ் காப்பிதான். ஒரிஜினல் இல்லை!"

அதிர்ச்சியில் அவள் வாய் அகலத் திறந்தது.



> **பழைய பேப்பர் கடையில் நான்கைந்து துக்ளக் இதழ்களை வாங்கிப் படித்ததுபோல் இருக்கிறது!**

**சோ** — கதை, சோ — வசனம். சோ — முக்கிய பாத்திரத்தில் நடித்திருக்கிறார். அதுவும் என்ன மாதிரி பாத்திரம்? அமைச்சர் அறிவரசன்! எல்லாவற்றையும் கூட்டிப் பார்த்து, 'ஆகா தமிழில் அட்டகாசமாய் இன்னொரு அரசியல் படம்டா டோய்!' என்று போய் உட்கார்ந்தால்...

எடுத்தவுடன், சுதந்திர வீரர் ஒருவரை குட்டிபத்மினி பேட்டி காண்கிறார், காண்கிறார், கண்டு கொண்டேயிருக்கிறார். டி.வி.யில் பார்க்கும் இயாலி பேட்டிகளையெல்லாம் தூக்கிச் சாப்பிட்டுக் கொட்டாவி, விடச் செய்கிறது இந்தப் பேட்டி. நாற்பத்தேழுக்கு அப்புறம் வந்த லஞ்சம், வஞ்சம், ஊழல் என்று நாடறிந்த விஷயங்களை எலாஸ்டிக் போல இழுக்கிறார் பாருங்கள், வந்து மாட்டிக் கொண்டோமே என்று பதற்றம் ஏற்படத்தான் செய்கிறது. இத்தனை பெரிய முன்னுரை அநியாய அநாவசியம்.

போகிறது. கதை? அதுவும் முறுக்கு விட்டுப்போன சணல்தான். விவசாயிகள் நிலத்தைப் பறித்து, ஐந்து நட்சத்திர ஹோட்டல் கட்ட ஒரு பணமுதலை முடிவுசெய்து, அமைச்சரின் சிபாரிசோடு அந்த நிலத்தை அபகரிக்கிறார். எதிர்த்துக் குரல் எழுப்பும் ஒரு பெண் நிருபர் அக்கிரமங்களுக்கு எதிரில் தோற்றுப் போகிறார்! திரிக்கும் கயிறை நாருக்கான, உறுதியான மணிக்கயிறாகத் திரிக்க வேண்டாமா?

தமிழ்நாட்டு அரசியலையும், இரண்டு பிரதான கட்சிகளின் ஊழல் விவகாரங்களையும் எக்ஸிபிஷனில் வைக்கச் சோவை விடச் சிறப்பான ஆள் இல்லை. எரியும் பிரச்னை எதிர்கொள்ளும்போது தமிழின் பெயரைச் சொல்லி, சிலை வைக்கும் இடம் பற்றிச் சண்டை போட்டு, அப்படி இப்படி உருப்படி இல்லாத விஷயங்களில் மக்களின் கவனத்தைத் திசைதிருப்புவது பற்றிப் பிட்டுப் பிட்டு வைக்கிறார். ஆனால் எதிர்க்கட்சித் தலைவரின் கேரெக்டர், அவர் நல்லவரா அல்லது சோ சொல்வது போல் குட்டையில் ஊறிய மட்டையா என்பது மகா குழப்பம். சோவின் வசனங்களில் எதிர்பார்த்த குத்தல், எதிர்பார்த்த நகைச்சுவை உண்டு. ஆனால் எல்லாம் 'எதிர்பார்த்த' என்பதாலேயே சலிப்பாய் இருக்கிறது.

சம்பவங்கள், புதுமையான கோணங்கள், நேர்த்தியான எடிட்டிங், இழுத்துப் பிடிக்கும் டைரக்ஷன் — எல்லாம் மிஸ்ஸிங். ஓடிக் கொண்டேயிருக்கும் ஃபிலிமை அறுத்து விட்டது போல் தடால் முடிவு.

நான்கைந்து துக்ளக் இதழ்களைப் பழைய பேப்பர் கடையில் வாங்கிப் படித்தது போல் இருக்கிறது!

— ஜெயமன்மதன்.

# எட்டமுடியாத! ஏழு ரன்கள்!



எம். ஆர். எஃப். கோப்பையைப் பெறுகிறார் மியான்தாத்.

கண் புடைத்துப் போயிருக்க, அதை மறைக்கக் கண்ணாடியும் அணிந்த ஸ்ரீகாந்த், ''நான்தான் இந்த மாட்சில் ஆடலையே!'' என்று அங்கலாய்த்துக் கொண்டிருந்தார். அப்படியும் கையெழுத்து வேட்டைக்காரர்கள் அவரது கையெழுத்தைப் பெற முற்றுகையிட்டனர்.

பெவிலியனில் ஆட்டக்காரர்கள் தங்குமிடம் முழுதும் ஒரே போலீஸ் தலைகள். கையெழுத்து வேட்டைக்காரர்கள் இந்தப் போலீஸ்காரர்களையும் தாண்டிப் போய்ச் சில ஆட்டக்காரர்களிடம் ஆட்டோகிராப் வாங்கியது எப்படி? ஒரு போலீஸ் அதிகாரி தம் மகளை அழைத்துப் போய்க் கையெழுத்துப் பெற முயன்றது மற்றவர்களுக்குச் சாதகமாக அமைந்து விட்டது!

பெவிலியனில் ஒரு பிளாஸ்டிக் பையில் நீரை அடைத்து வைத்துக் கொண்டு ஜேப்பியார் பெருமையுடன் சொல்லிக் கொண்டிருந்தார்: ''ஸ்டேடியம் முழுக்க முப்பதாயிரம் பிளாஸ்டிக் பைகளில் இலவசமாக நீரை வழங்கியிருக்கிறோம்!'' அடேயப்பா! சாதனைப் பட்டியலில் சேர்க்கப்பட வேண்டியதுதான்!

''இந்த ஒருநாள் கிரிக்கெட் மாட்சை நடத்துவது மெட்ராஸ் ரவுண்ட் டேபிளா? எம். ஆர். எஃப். நிறுவனமா?'' — சிலருக்குக் குழப்பம்.

மெட்ராஸ் ரவுண்ட் டேபிள் நெம்பர் ஒன் நடத்திய மாட்ச்தான் இது. இதில் கிடைத்த பதினைந்து லட்சம் ரூபாயை அண்ணா நகரில் உடல் ஊனமுற்ற குழந்தைகளுக்கு இல்லமும், எரையூர் கிராமத்தில் ஆஸ்பத்திரியும், சென்னை நகர மாணவர்களுக்குப் புத்தக வங்கியும் ஏற்படுத்த உபயோகிக்கப் போகிறார்கள். இந்த மாட்சுக்குப் பல லட்சங்களை அள்ளித் தந்த 'ஆதரவாளர்' எம். ஆர். எஃப். நிறுவனம்! அதனால் தாராளமாகவே பப்ளிசிடி செய்து கொள்ளப் போக, எம். ஆர். எஃப். நிறுவனமே இதை நடத்தியது போன்ற ஒரு பிரமை பலருக்கு ஏற்பட்டுப் போயிற்று. இந்த பப்ளிசிடியின் ஓர் அம்சமாக, இடைவேளையின்போது கிரிக்கெட் மைதானத்தில் ஒரு ரேஸ் காரின் ஊடுருவலும் உறுமலும் வேறு! போகட்டும், எப்படியோ, எல்லாம் நல்ல காரியத்துக்காகத்தானே!

பாகிஸ்தான் அணியில் மூன்று ஸிக்ஸர்கள் அடிக்கப்பட்டன என்றால், அதை விஞ்சும் விதமாக காப்டன் சுனில் காவஸ்கர் முதலில் ஒரு ஸிக்ஸரும் பிறகு தொடர்ச்சியாக நான்கு ஸிக்ஸர்களும் விளாசித் தள்ளினார். ஆனால் எல்லாம் வியர்த்தமாயின.

கடைசிவரை திரில்லிங்காக அமைந்த இந்த மாட்சில் இந்தியா ஏழு ரன்கள் எடுக்க முடியாமல் தோற்றது ரசிகர்களுக்குப் பெருத்த ஏமாற்றம்! எம். ஆர். எஃப் கோப்பையை மியான்தாத் பெற்று, பாகிஸ்தான் ஆட்டக்காரர்களின் போராட்ட வல்லமையை நிரூபித்தார். கபில்தேவ் மனம் வைத்திருந்தால் அவரால் காவஸ்கருக்கு வெற்றியைப் பெற்றுத் தந்திருக்க முடியும் என்பது கபில் ஆட்டத்தை அன்று கவனித்துப் பார்த்தவர்களின் கணிப்பு.

— குண்டுமணி

புகைப்படம்: கே. என். சாரி

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: ஓ. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.

